உ

கோளாஷ்டகம்

6-21

ஓம்

ஓம் தத்ஸத் :

பரமஹம்ஸ

# ஸ்ரீ சுப்ரமண்ய ஸ்வாமிகள்

(ஓம் சாந்தி மௌன ஸ்வாமிஜி அவர்கள்)

திருவாய் மலர்ந்து அருளிய

# ஸ்ரீ நவக்ரஹ லீலை



ஸ்ரீ புவனேஸ்வரீ பீடம்

ஓம் சாந்தி ஆச்ரமம்

(அப்பாள்புரி) : : அம்பத்தூர் P.O.

RAS.

ஓம்

தத் ஸத்



ஸ்ரீ மௌன ஸ்வாமிஜி





# முன்னுரை

இஷ்ட கார்யசித்திக்கு ஸ்ரீ விச்வ மங்கள விநாயகர், ஸ்ரீ யோக ஆஞ்சநேய ஸ்வாமியும் அருள் புரிவார்கள்! இஹலோக வாழ்க்கைக்கு கஷ்ட நிவாரணத்திற்கு, அவரவர் அபீஷ்டத்தை பூர்த்தி செய்வதற்கு, முதலிய துக்க நிவர்த்திக்காக, ஸ்ரீ நவக்ரஹ ஆராதனம் செய்யவேண்டியது அவசியம்! இஷ்ட காம்யத்தை பெறக்கூடிய ஸங்கல்பத்தை முதலில் ஆரம்பித்து, கடைசீயில் ப்ரம்மார்ப்பணமென்று சாந்தி அடைய செய்வதான ஸாக்ஷாத்கார ஸ்ரீ புவநேச்வரியின் பாதத்தண்டை விளங்கும், ஸ்ரீ நவக்ரஹ மூர்த்திகளின் அனுக்ரஹம் பெறவேண்டி முயற்ச்சித்தால், சீக்கிரத்தில் ஒவ்வொருவருக்கும் உண்டாகும்!

இந்த திவ்ய "ஸ்ரீ நவக்ரஹ லீலை" ஸ்டாக் இல்லாததால் ஸ்ரீமான் V. ராஜாரும், சார்டட் அக்கவுண்டன்ட் அவர்களுடைய உபயமாக அச்சிடப்பட்டு வெளி வந்திருப்பது யாவராலும் போற்றத் தகுந்ததேயாகும்!

ஸ்ரீமான் V. ராஜாரும் அவர்களுக்கும் அவர்களை சேர்ந்த யாவருக்கும் அம்பிகையின் கடாக்ஷம் உண்டாகும்!

'நாராயணஸ்மரணம்' ஓம் சாந்தி

6-2

ஓம் தத்ஸத்

# நவக்ரஹங்களும் அவர்களின் அற்புத லீலைகளும்

---

## லோக மக்களை எவ்வாறு பாதிக்கிறது?

---

சூரியன் - சந்திரன், செவ்வா - புதன், குரு-சுக்ரன், சனீச்வரன், ராகு, கேது! இந்த திவ்ய நவக்ர ஹங்களும் ஒவ்வொரு ஆத்மாக்களுக்கும் அவரவர் களுடைய கர்மானு ஸந்தானப்படி அமைந்திருக்கிறது. எங்கும் நிறைந்த பொருளின் அம்சம் அவர்களிட மிருப்பதால் தனித்தனியாக ஒவ்வொருவரிடத்திலும் அததுக்குத் தகுந்தபடியுள்ள கார்யாதிகளைச் செய்து கொண்டு விளங்குகிறார்கள்.

ஆதியில் சூரியன் ஒரு க்ரஹமே! அதிலிருந்து குண சேர்க்கையாலேற்பட்ட மனிதனுக்கு தகுந்த தொழிலை விதிப்பதற்காக படிப்படியான நவக்ரஹ நிலைகள் உண்டாயிற்று.

இந்த நவக்ரஹங்களும் ஒவ்வொருவரிடமும் அமைகிறபடியினாலே, எங்கும் நிறைந்த பொருளின் ஒளியை அடைந்த நித்ய ஸ்வரூபிகள் என்றே கூற வேண்டியது.

தற்போது அந்த க்ரஹம் அவன் அப்படி! இந்த க்ரஹத்திலே இவன் இப்படி! என்று க்ரஹ நிலையை பழிகூறி ஜோஸ்யம் பேசுகிற இடத்தில் அறிவாளிகள் இருந்து கேட்கவே கூடாது. தன்னையே பழித்துக் கொள்கிறோம்! என்பதை ஜோதிஷன் அறியும்போது ஞானவானாகி கிரஹ நிலையைப் போற்றுவான்.

ஜோதிடம் என்றால் ஜோதி தங்கும் இடம் ஜோதிஷம்! அஞ்ஞான அந்தகாரத்தை நசிக்கச் செய்யும் திவ்ய தேஜஸுடன் ஹ்ருதயத்துள் உதிக்கிற ஆதித்யனுடைய ஒளிபெற்ற கிரஹங்களின்மூலம் அந்தத் திவ்ய தேஜஸைக் காண வழி உண்டாகிறது. இந்த திவ்ய தர்சனத்தை காண்பதால், கிரஹ நிலை முழுதும் தனக்குத்தானே உணர்த்துவதுதான் ஜோதிஷம்!

ஆதித்யனுடைய தேஜஸ்ஸிலிருந்து கிரஹங்கள் ஆரம்பமாகிறது. ஆதிவாரம் ஸோமவாரம் என்கிறோம்! ஆதித்யனுடைய ப்ரதிபிம்பத்தைக் குறிப்பிடுகிறது சந்திரன். ப்ரதிபிம்பத்தை கிரஹித்துக்கொள்ளும் சக்தி மனஸுக்குண்டு! சந்திரனுடைய தன்மை— மனஸுக்குமிருப்பதால், (ஆதித்யனிடமிருந்து) பரமாத்மாவிடமிருந்து நழுவிய ஜீவன் மனஸாக மாறி சந்திரனைப்போலுள்ள சலன புத்தியாகி, க்ரஹங்களை அடைகிற தன்மை வந்துவிடுகிறது. ஒரே க்ரஹத்திலிருந்து நழுவியதால், பல க்ரஹங்களை அடைகிறான் ஜீவன். நழுவாமல் ஒரே கிரஹமாகிய பரமாத்மாவில் ஐக்யமேற்பட்ட ஜீவன், ஒரு தன்மையுமில்லாதது பரம் பொருளாக ப்ரகாசிக்கிறது. இது ஆத்மஞானமடைந்தவனுக்கு சரி!

ஞானமடையாதவனுக்கு கிரஹங்கள் உண்டென் பதை நம்புவானே ஒழிய அதன் தொழில் விசேஷங் களோ ஒன்றுமே தெரியாது. வாஸ்தவத்தில் தனக்குத் தானே கர்மானு ஸந்தானப்படி நடக்கும் தொழில் களுக்கு ப்ரதியொலியென நவக்ரஹங்களுக்கு நாம மிட்டுக் கூறுவதுதான் இதன் உள்கருத்து.

பூமிக்கும் சந்திரனுக்கும் நல்ல ஒற்றுமையுண்டு! பூமிக்கு நல்ல பயிற்சியாலேற்பட்ட உத்ஸாஹத்தைக் கொடுக்கிறபடியால், சந்திரனே மனதில் தியானிப் பதால் உள்ளம் அழகுடைய்தாக சோபிப்பதுடன், தேவியை உபாஸிக்கிறுன்.

பூமிக்கும் சந்திரனுக்கும் எவ்வளவு தூர முண்டோ அவ்வளவு சந்திர க்ரஹத்திலிருந்து செவ்வாய் கிரஹம் சோபிக்கிறது. செவ்வாய் கிரஹத் திலிருந்து (அதாவது, மனம் ஒருமுகப்பட்ட ஞானத் தைக்கொண்டு) பூமியைப் பார்த்தோமானுல், செவ் வாய் கிரஹத்திற்கு பூமி செவ்வாயாகத் தோன்றும். ஆத்மஞானி உலகைப் பார்த்த அளவில் எல்லாம் மங்களமாக காண்பதால் செவ்வாய் கிரஹத்திற்கு ஸ்ரீ சுப்ரமண்யர் நாயகராகவிருந்து ஞானத்தை அளிக்கிறுர்.

புதன்–சந்திர குமாரன் என்பது ப்ரத்யக்ஷம். சந்திர ஸ்வரூபமாகிய மனம் நல்லதை அடைய முயற் சிக்கிற காலத்திலே பரிசுத்த ஹ்ருதயமாக (புத்த மாக) தோன்றுவதும் மனதால் துன்பங்களே அடை கிற காலத்தும் இந்த இரண்டின் தன்மையைப் பொறுத்திருக்கும் புத தசை! மனம் சந்திரனே உபா

ஸிப்பதால், ஞானத்தாலேற்பட்ட புத்த ஹ்ருதயம் பரிசுத்தமாக காண்பது ஒன்று! மனம் தளர்வடைந்து மனதையே காணுமல் உழலும்போதுள்ள தன்மையும் கூடியதாக அமைகிறது. நல்லதாகவும் கெடுதலாக வும் இருக்க உன்னுடைய முயற்சிக்கு அனுஸரணை யாக புதன் காக்ஷியளிக்கிறுர்.

வியாழன்—குரு ப்ரஹஸ்பதி பகவானைக் குறிப்பிடு கிறது. இவர் தேவகுரு! இவருடைய அருள் பார்வை யிருப்பதால் மூடனுகவிருந்தவனும் அறிவாளியாக சோபிக்கலாம்! ப்ரஹஸ்பதி—ப்ரஹத்—அதாவது பெரிய பொருளை உணர்ந்தவர் யாரோ, அவர் ப்ரஹஸ்பதி எனலாம்! பெரிய பொருள் ப்ரம்மத்தைத் தவிர வேறில்லை! ப்ரம்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்த மூர்த்தி ப்ரஹஸ்பதி என்று போற்றுவதால் ஆத்ம குருவாக ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியாக வந்து அத்யாத்ம ஞானத்தை சின்முத்ரையால் உணர்த்தி ஜன்மத்தை கடைத்தேற வைக்கும் வியாழ பகவானை ஸதா போற்றுவோம்!

இன்னொரு விசேஷம் தேவ குருவை இன்னுர் மகன் என்று யாருமே சொல்லவில்லை. வியாழன் என்ற ப்ரஹஸ்பதி பகவானுடைய க்ரஹம் அதி உயரத்தில் இருக்கிறது. அவர் அனுக்ரஹமிருந்தால், ஸர்வ ஸித்தியும் கைகூடும்! என்று போற்றினுர்களே ஒழிய இன்னுர் மகன் என்று குறிப்பிடாத காரணத் தினுலே யாவருடைய உள்ளத்திலும் ஆத்ம குருவாக வந்து காக்ஷியளிக்கிற ப்ரம்ம ஸ்வரூபமுடையவர்! என்றே நன்ருகத் தெளிவாகிறது

சுக்ராசார்யர்-இவரை அஸுர குரு என்று அழைப்பதால், அஸுரத்தன்மையுடையவர் என்று சொல்வதுகூடாது. இவர் உபதேசத்தைக்கொண்டே மஹாபலி தன்னை ஜயித்தான்—காமக்ரோதாதிகளாலே மோதப்பட்டவனும் அஸுரனே! இந்த அஸுரத் தன்மையை சிறுகச் சிறுகத் தீர்த்து ரக்ஷிக்கிறார் சுக்ராசாரியர். ஒரு விசேஷம்: இவருடைய உதயத்தைக் கண்டபிறகுதான் சூரியோதயம் காண்கிறோம்! இவர் அருளாலே காமக்ரோதாதி ராக்ஷஸர்களை ஜயித்து, பரிசுத்தமுடைய சித்தத்திலே சூரியோதயமென்னும் அருளைப் பெறுவதற்குக் காரணமாகிறது.

“சுக்கிரன் இல்லாவிட்டால் எது நடக்கும்? பணமில்லாதவன் பிணத்திற்கு ஸமானம்!” என்று தமாஷாகவோ கார்யமாகவோ சொன்னாலும் அது ஒரு விதத்தில் நன்மையே! ஆத்மாநந்தம் கொள்ள செய்வதற்காக சுக்ரன் நமக்குப் பொருளாக அருள்கிறார்-நாம் பூர்ண நிலையை அடையவேண்டுமென்பதே அதன் கருத்து.

சனிச்வரன்-சங்கர நாராயண ஸ்வரூபம். இவருடைய லீலை பலவிதமாக இருக்கும். இருந்தாலும் ஞானத்தைப் பற்றியதும் ஸமத்வ சித்தத்தைப்பற்றியதுமாகவே மக்களிடம் காணப்படுகிறார்! ஆத்மநந்தம் அடைய செய்தும் அதற்குரிய பொருளோ அருளோ யாவையுமே தந்து ரக்ஷிக்கிற தன்மை உண்டு! இந்த நினைப்பைக்கொண்டு ஸ்ரீ சங்கரநாராயண ஸ்வரூபத்தை தியானிப்பதால் அருள் சீக்கிரம் உண்டாகிறதென்பதைப் போதிக்கிறார்.

சீ—சீ! சனீயனே! என்று நீ வெறுத்துக்கொள்வதால், அது உன்னை வெறுப்படைவிக்கிறது. "ஈச்வரா, தயாநிதே! சங்கரநாராயண ஸ்வரூபா! ஸதா மங்களத்தைக் கொடு! என்று நினைப்பதால், மங்கள ஸ்வரூபமாகக் காக்ஷி கிட்டி அருள் உண்டாகிறது.

இராகு-கேது இருவரும் அம்ருதத்தில் உண்டானவர்கள்! எப்படியென்றால், தேவர்களும் அஸுரர்களும் பாலாழியில் அம்ருதம் கடைந்து எடுத்தபோது, மாயா மோஹினியால் விளம்பப்பட்ட தேவாம்சத்துடன் ஒரு அஸுரனும் உட்கார்ந்திருந்தான். அவனுக்கும் அம்ருதம் கையிலிட்டதும் சூரிய சந்திரர்கள் ஸ்ரீமோஹினியிடம் அவன் அஸுரன் என்பதைத் தெரிவித்ததும், மோஹினி தம் கையிலுள்ள கரண்டிக் காம்பால் அந்த அஸுரனை அடித்ததும் இரு உடலாக மாறி, மேல்பாகம் பாம்பின் தலையாகவும், கீழ்பாகம் பாம்பின் வாலாகவும் கிளம்பி சந்திர சூரியர்களைத் துரத்தியபோது, ஈச்வர க்ருபையுண்டாகி "நீங்களும் கிரஹங்களாக சோபியுங்கள்! இருந்தாலும் இந்த குற்றத்தை மக்களிடையில் ஸதா தெரிவிக்க வருஷா வருஷம் சந்திர சூரியர்களை மறைத்து, உலகத்தோர்களுக்கும் தெரிவித்தால் போதும். அவர்களுக்கு ஞாபகார்த்தமாக இதை செய்தால் போதுமென்று!" சொல்லி யருளைக் கொடுத்தார்! இதன் காரணமே சந்திர கிரஹணமும் சூரிய கிரஹணமும் இன்னும் உலகில் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறதென்பதை அறிய வேண்டும்!

ஒரு நொடியில் ராஜாவாக்கவும் ஒரு நொடியில் ஏழையாக்கவும் இராகு செய்வது ஸர்வ ஸாதாரணம்! இராகுவினுடைய பெரும்தன்மை அளவு கடந்தது. அம்ருதத்தில் உண்டாகியவராதலால் மரணத்தை ஜயிக்கவும் வழிகாட்டுவார் இராகு பகவான்!

கேது-வால்-வாலுக்கும் மிகுந்த மஹத்வம் உண்டு! வால் ஜீவன் தலைக்கு வா! வால் ஜீவன் தலைக்கு வா! வால் ஜீவன் தலைக்குவா! என்று செத்த பாம்பை வால் நெளிந்திருப்பதைக் கண்டாயானால் வாலைத் தட்டி இப்படிச் சொல்வதால் பாம்பு உயிர் பெற்று எழுந்து ஓடுவதைப் பார்க்கலாம். ஸாதாரணை இதுவே இப்படி ப்ரத்யக்ஷமாகக் காணவேண்டு மானால், ஞானத்தைப்பற்றிய அறிவை எவ்வளவு தூரம் போதிப்பார் என்பதை சொல்வதற்கு அளவே யில்லை!

இப்படியே ஒவ்வொரு கிரஹங்களும் ஆத்மார்த் தத்தை முன்னிட்டு இருப்பதால், தனித்தனியாக விருந்து லீலைகள் செய்ய மக்களை பரவசப்படுத்துவதை நாம் பார்க்கிறோம்!

ஆத்ம ஞானியானவன், தாம் முன் செய்த கர்ம பந்தத்தால் கிரஹ நிலை ஏற்பட்டதை அனுபவியாமல் தள்ளிவிடமாட்டான். தம்முடம்பைப் பற்றியதாக யிருந்தாலும் சரி; அதைத் தப்பிக்க எண்ணாமல் அனு பவித்தே தீர்த்துவிட்டு பேரானந்தம் கொள்வான்- ஆத்ம ஞானியல்லாதவனோ விருப்பு வெறுப்புக்களால் மோதப்பட்டு, கஷ்டத்தை ஸஹிக்க முடியாமல் தள்ளாடுகிறான். எந்த விஷயத்தின் பொருட்டும்

ஸஹிப்பு தன்மை உடையவன் மேலோன் என்பதை உணர்வதற்கு நவக்ரஹ லீலே போதிப்பிக்கிறது.

அழுக்குடைய பாத்திரத்தில் ஒரு நல்ல வஸ்துவை வைக்கும்போது நல்ல வஸ்துவும் மங்கலாக அழுக்குடன் காணப்படுகிறது. இதேபோல உன்னுடைய ஆத்மாவானது முன் செய்த கர்மானுஸந்தானப்படி கிரஹ நிலேகளே மங்கலாகவும் தெளிவாகவும் வைக்கிறதை நீயல்லவா உணர்ந்து தெளிவுடனிருக்கவேண்டியது? போக அவைகளேக் குற்றமெனக் கருதுவது பிசகு-உன் குற்றமே ஒழிய எப்பவுமே விளங்கும் கிரஹங்கள் தெய்வீகம் என்று உணர்.

ஒரே நிலேயிலிருந்து நவக்ரஹங்கள் இருந்து ஏற்பட்ட போதிலும் அததுக்குத் தக்கபடித் தொழிலே உத்தேசித்து தனித்தனியாக பிரித்து க்ரஹ அதிகாரிகளாகத் தோன்றுபவர்களுக்கும் தனித்தனியாக மந்திரங்களே ஏற்படுத்தியிருக்கிருர்கள்-நாம் செய்த முன் கர்மானுஸந்தானப்படி நம்மை எது பாதிக்கிறதோ, அதற்குள்ள சாந்தியையும் கூறி க்ரஹ நிலேயின் மூல மந்திரங்களேயும் ஏற்படுத்தியதைக் கொண்டு யஞ்ஞாதிகள் புரிவதால், நம்மை அடைந்த துஷ்கர்மா விட்டு விலகுகிறது-பரிசுத்த க்ரஹத்தில் அதிகாரி தர்சனமளிக்கிருர்கள்.

சூரிய க்ரஹம்—'ஆதித்யாய வித்மஹே ஸஹஸ்ர கிரணுய' தீமஹி: தன்னே சூர்ய: ப்ரஜோதயாத்!" இந்த திவ்ய மந்திரம் சூர்யபகவானுடைய அந்தர் லக்ஷயத்தை குறிப்பிட்டு, உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது. ஆதித்யன்-என்ற பொருளுக்கு விசால

மடைந்த ஹ்ருதயத்துள் உதிப்பது எதுவோ, அது ஆதித்யன். இந்த ஆதித்யனுக்கு ரச்மிகள் பலகோடி சொரிவதால், உள்ளம் பரிசுத்தத் தன்மையை அடைகிறது-இந்தப்படியுள்ள பரமஹம்ஸர்களுடைய ஹ்ருதயத்துள் காண்கிற ப்ரதிபிம்பமே சூரியனாக உலகில் ஸஞ்சரிக்கிறது-ஆனால், முதலில் சூரியனைக் கண்ட பிறகுதான் ஆதித்யனைக் காணமுடியும் ஆதித்யனைக் கண்டாலோ சூரியன் நம்முடைய அம்சமெனக் கருதுவது ஞானயோகியர்களின் வழி!

சூரியனை த்ருப்தி செய்யக்கூடிய தான்யம், கோதுமை என்று, தகுந்த விப்ரனை ஆவாஹனை பூர்வம் உட்கார வைத்து, கோதுமையை தானம் வழங்குகிறோம்-இதில் ஒரு விசேஷம். கோதுமை கதிர் நல்ல அழகாக இருக்கும். சூரியனுடைய கதிரொளியும் நீண்டு நீண்டே வீசி பரவுகிறது. இதை நேரில் பார்த்தும் வருகிறோம். இப்படியுள்ள தியானத்தாலேற்பட்ட கதிரொளியைக் கொடுக்க முடியாமல், அதைத் தியானித்துக்கொண்டு கோதுமை யென்று வழங்குவதால், தானத்தின் பயனானது தியானத்தைக் காட்டுகிறது.

ஒரே சூரியன் கஷ்டத்தையும், தருகிறார்! ஸுகத்தையும் தருகிறார் என்று சரீராபிமானமுள்ளவனால் கூறப்படுவதானது அவனையே அது பாதித்து, கஷ்டமும், ஸுகமும் கலந்த வாழ்க்கைக்கு அனுஸரணையாக க்ரஹமும் அமைந்து விடுகிறது-எப்போது தியானத்தாலேற்பட்ட ஆதித்யனுடைய கதிரொளியை கோதுமையென உண்டு ஆனந்திக்கிற ஹ்ருதயமுடையவன், ஸமசித்தமுடையவனானதால், ப்ரம்ம

ஸ்வரூபமாய் சோபிக்கக் காரணமாயிருக்கிறவரும் அவரே என்பதை மறக்க முடியாது.

காலையில் உதயமாகிற சூரியனை நோக்கி, மூல மந்திரத்துடன் ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, பூஜிப்பவனுடைய உள்ளமானது பழக்கத்தில் ஆதித்யனுடைய ஒளியைப் பெறுகிறது-ப்ரதிபிம்பமாயிருக்கக்கூடிய ஒன்றை பூஜிக்கும்போது, ப்ரத்யக்ஷ மூல பிம்பம் உன்னிடம் தோன்றி, ப்ரம்ம ஸ்வரூபத்தை விளக்கி விடுகிறது.

சூரிய மந்திரம், சூரிய நமஸ்காரம் இவைகளைச் செய்வதால் ஒருவித வியாதியும் கிட்ட வராது. பரிசுத்தமுடையவனாகச் செய்யும். எல்லா கிரஹங்களுக்கும் சூரியனுடைய ஒளியாலேற்பட்ட சக்திகளேயாகும்.

ஓம் "ஆதித்யாய வித்மஹே ஸஹஸ்ர கிரணாய தீமஹி: தன்னோ சூர்ய: ப்ரஜோதயாத்!" இந்த திவ்ய மந்திரத்தை தினமும் சொல்லிச் சொல்லி நூற்றெட்டு நமஸ்காரங்கள் காலையில் செய்துவந்தால், வியாதிகள் ஒழிந்த உன்னுள்ளத்தில் ஆதித்ய ஹ்ருதயம் தேஜோமயமாகச் சோபிக்கும் என்பது நிச்சயம். இந்த மந்திரத்தால் ஹோமதிரவியங்களுடன் யஞ்ஞாதிகள் செய்வதாலும் பீடைகள் ஒழிந்து விடுகிறது.

சந்திர க்ரஹம். "ஆப்யாயஸ்வ ஸமேதுதே விச்வத ஸ்ஸோமவ்ருஷிணியம் பவாவாஜஸ்ய ஸங்கதே!" இது சந்திர கிரஹ அதிகாரியின் மூல மந்திரம்-இவ்வுலகம் எதனால் ஜீவிக்கிறதோ, அந்த ஸத்து ஸ்வரூபமாயிருக்கும் சந்திர ரூபமே என்னை ரக்ஷிப்பா

யாக! என்று முறையிடுகிறது இந்த மந்திரம். நெல், அரிசி இவைகளாலே இவ்வுலகம் ஜீவிக்கிறது. மனிதனுக்கு வாழ்க்கையில் குதூகலம் ஏற்படாவிட்டால், தளர்வடைகிருன் அல்லவா? அந்த ஸமயம் பூர்ண சந்திர முகத்தைப் பார்த்ததும் ஆனந்தமடைகிருன். இதைப்போல பசிவந்தவன் அன்னம் உண்ணுவிட்டால், எவ்வளவோ கஷ்டப்படுகிருன். உண்டதும் தன்னை மறந்தும் விடுகிருன்.

இதைப்போலுள்ள அனுபவமடைந்து, பூர்ண சந்திரனை மனதில் தியானித்து, விசால ஹ்ருதயத்துள்ளே பயிற்சி யென்னும் நெல் கதிர்போல நாடியின் மூலம் இழுத்து, சித்த சுத்தி அடைவிக்கிற கிரஹமே சந்திர க்ரஹம் என்பதை அறி!

இவ்வுலகில் காணும் சந்திரன் தேயு பிறையும் வளர் பிறையுமாகக் காக்ஷியளித்து, மக்களை பிரமிக்கச் செய்தாலும் மனதாலேற்பட்ட ஞானமென்னும் சந்திரன் பூர்ண சந்திரனுக தர்சனமளிப்பதைக் காண்பதால், துர்க்குணங்கள் இல்லாத பூர்ண சந்திரனைப் போல பிரகாசிக்கிருன்.

நீ சந்திரனை களங்கமுடையவனுக எண்ணுல், நீ களங்கமுடையவனுகி விடுகிருய்-பூர்ண அருளுடையவன் சந்திரன்-என்று நினைப்பதால், பூர்ண அருளாக வந்து உன்னுள் சோபிக்கிருன் சந்திரன்.

சந்திரக்ரஹம்-பெண்ஸ்வரூபம்! சூர்யன் புருஷன்-சந்திரக்ரஹம் ஆனந்தத்தைக் கொடுக்கும்-சூர்யனே நல்லதையும் கெட்டதையும் தருகிறதானுலும் நீ நல்ல குணமுடையவனுகிவிட்டால் ஒன்றுமில்லை! இல்லையேல் அனுபவிக்க வேண்டியதுதான்.

சூரிய பகவானை நினைத்து கோதுமை தானம் கொடுப்பதுபோல சந்திர பகவானை நினைத்து நெல்லோ அரிசியோ கொடுப்பதால், களங்கம் தீர்ந்து பூர்ண சந்திர தர்சனம் பெறலாம்–என்று கூறுவதுண்டு! சந்திரனை நினைத்துக்கொண்டு, மந்திர ஆகுதியுடன் நெய்யை ஓமம் செய்வதால் துன்பமடைந்த நம்மை சந்திரனுக்கு எந்த சக்தி உதவுகிறதோ, அந்த சக்தி நம்மைக் காப்பாற்றி களங்கங்களைத் தீர்த்து ரக்ஷிக்கிறது.

பூமிக்கும் சந்திரனுக்கும் நல்ல ஒற்றுமை. பூமியும் தாய்! சந்திரனொளியும் தாய்! இரண்டு பேர்களும் ஸஹோதரிபோன்றவர் என்று கூறலாம். எங்கெந்த கிரஹங்களை உத்தேசித்து யஞ்ஞாதிகள் செய்கிறோமோ அந்தந்தக் கிரஹங்கள் திருப்தி அடைவதற்கு முன் பூமிதேவி ஸந்தோஷமடைகிருள். அதிலும் சந்திரனுடைய பயிற்சியைக் கண்டு மிகவும் ஆநந்தம் அடைகிறதுண்டு.

சந்திரனுக்கும் பூமியினுடைய காந்த சக்தி வேண்டியிருக்கிறது. பூமிக்கு சூரியனுடைய உஷ்ணமும் இருப்பதாலே மக்களை போஷிப்பிக்க கனி வர்க்கங்களைப் பொழிய காரணமாகிறது–அந்த செடி கொடிகளை உத்ஸாஹப்படுத்தி, மேலே எழுப்பும் சக்தி சந்திரனுடையது. வேண்டிய ஸத்தை சுரக்கும் சக்தி பூமிக்குண்டு! இப்படியே ஒவ்வொரு க்ரஹமும் ஒன்றுக்கொன்று உதவிக்கொண்டே இருந்து, உலக மக்களை ரக்ஷித்து வருகிறதைக் காணும்போதுதான் நவக்ரஹங்களுடைய ரஹஸ்யம் விளங்கும்.

ஒன்றுக்கொன்று ஸ்நேஹ பாவம் காட்டுவது போலவே, மனோமயமுடைய மனிதர்களுக்கும் மனோமயமாகவிருந்து, அததுக்குத் தக்கபடி தொழில்களை நடத்தி, மனிதர்களை ப்ரமிக்கும்படிச் செய்கிறார்கள் என்பதை நீயும் மனோமயமாகத் திரும்பிப் பார்க்கும் போது உன்னுடைய தன்மையும் அவர்களுடைய கிரஹங்களுடைய தன்மையும் நன்றாக ப்ரத்யக்ஷமாகக் காண்பாய்!

செவ்வாய்—அங்காரகன் என்றும் கூறுவர். இந்த கிரஹ அதிகாரியை அக்நி நிறமுடன் அக்நிக் கண்ணில் பிறந்தவர்! பூமிக்கு மிகுந்த த்ருப்தியைக் கொடுப்பவர் என்று போற்றப்படுகிறது.

"அக்நிர் மூர்த்தாதிவ: ககுத்பதி: ப்ருதிவ்யா அயம் அபாகும் ரேதா கும்ஸி ஜின்வதி! ஸ்வாஹா! என்று செவ்வாய் கிரஹ மூலமந்திரத்தைக் கூறி, அக்நியில் ஓமங்கள் செய்வதால், எப்படிக்கொத்த அபராதங்களையும் தீர்த்து, பிழையில்லாதாக்கி ரக்ஷிக்கிறார்! இந்த திவ்ய மந்திரத்தினுடைய பொருளாவது ரேதஸ்ஸை அடக்கி, யோகதாரணையுற்று, மேதா சக்தியைக் கிளப்பி நெற்றியில் அக்நிக்கண் வரச்செய்த ஈச்வரனுக்குத் திருக்குழந்தையாக ஆவிர்பவித்த ஸ்ரீ சுப்ரமண்யரை குறிப்பிட்டு, இந்த செவ்வாய் கிரஹம் ஏற்பட்டது. அப்படிக் கொத்த திவ்ய சக்தியுடையவர் என் பிழையை பொறுக்கட்டும்! என்று கூறி மூல மந்திரத்துடன் நெய்யை ஹோம குண்டத்தில் விடுவதால், அக்நி ஸ்வரூபமாக வந்து ஏற்றுக்கொண்டு அனுக்ரஹம் புரிகிறார்! இந்த மந்திரத்தை ஸஹஸ்ராவர்த்தினமும் ஜபிப்ப நீங்கி பரிசுத்தமடைகிறது—என்பது நிச்சயம்.

அக்நி நிறமுடையவராதலால், சிகப்பான துவரையை விப்ரனுக்கு தானமிடுவது வழக்கமாயிருக்கிறது. இவற்றைக் கொடுப்பதுடன், அந்த விப்ர செவ்வாய்கிரஹ அதிகாரியே நேரில் ஏற்றுக்கொள்வது போல மனதில் தியானித்தவனுகக் கொடுக்கப்படும் தானம் சிரேஷ்டம்.

செவ்வாய் கிரஹமுடையவனை பூமி நன்றுக போஷிப்பிக்கிருள்—நல்ல வாஹனங்களைக் கொடுத்தும் நல்ல தர்ம சிந்தனையையும் அருள்கிருள் பூமிதேவி!

செவ்வாய் கிரஹமுடையவன் தர்மசிந்தனையில்லாதிருந்தானுகில், பல வியாதியால் பீடிக்கப்படுவதைக் காணலாம். இந்தப் படியிருப்பது கிரஹ குற்றமல்ல! தன் குற்றமே என்பதை அறியும் காலத்திலே வைத்யநாதனுக வந்து ரக்ஷிக்கிருர் என்பதை அறியவேண்டும்.

மேஷ வ்ருச்சிக ராசிக்கு அங்காரகன் ஈசராக விளங்குவதாலும் நக்ஷத்திர சக்ரத்துடன் ஸஞ்சரிப்பதாலும் நல்ல படித்த வித்வானுகி, ஞானத்தைத் தருகிறவர் ஸ்ரீ சுப்ரமணியர்-என்று நன்றுக விளக்குகிறது.

புத க்ரஹம். ஸோம வம்சமும் ஆத்ரேய கோத்ரமுமுடையவர் புதன். சூரியனுடைய ஈசானத்தில் விளங்குகிறது புதக் கிரஹம். கன்யா ராசிக்குமிகவும் பிரியமுடையவர். சாம்பேய புஷ்பத்தினுடைய நிற முடையவர். வாதரோக முடையவன் புதக்ரஹ அதிகாரியை நினைத்து, "உத்புத்யஸ்வாக்நே ப்ரதிஜா க்ருஹ்யேந மிஷ்டாபூர்தே ஸகும்ஸ்ரு ஜேதாமயம்ச, புன: க்ருண்வங்க் ஸ்த்வா பிதரம் யுவான மன்வா

தாகும்ஸீ த்வயிதன் துமேதம்," ஸ்வாஹா: இந்த திவ்ய மந்திரத்தால் ஹோமம் செய்வதாலேயும் ஸஹஸ்ரா வர்த்தி ஜபிப்பதாலேயும் வாதரோகத்தை நிவாரண மாக்கி, பரிசுத்த தன்மையுடையவனுகச் செய்கிருர்! புதக்ரஹம் விதியால் துதிக்கப்படுகிறவர் ஆதலால், தனக்கு ஏற்பட்ட விதியை நொந்துக்கொண்டு த்ரவி யங்களுடன் ஹோமம் செய்வதால், புதக்ரஹம் பரிசுத்தமாகக் காணப்படுவதுடன், அதிகாரியால் அனுக்ரஹமும் பெறுவாயென்பது நிச்சயம்.

சூரியனிடமிருந்து பிரகாசத்தை இழுத்து, செடி கொடிகளை பச்சை நிறமாக்கும் தன்மையுடையவர் புதன். பச்சை பதார்த்தங்களிடம் பிரியம் ஏற்படுகிற வர். ஆதலால், பச்சைப் பயிறை தானம் வழங்கப் படுகிறது. ஸாதாரண கற்களைக்கூட பச்சை நிற மாக்கும் தன்மை புத கிரஹத்திற்கு உண்டு! இந்தப் படி ஒவ்வொரு கிரஹங்கள் இருப்பதாலேதான் கற்கள் பச்சையாகவும், செவ்வாய் கிரஹம் சிகப்பு கற்களாகவும் இயற்கையிலேயே அமைவது போலுள்ள பல திவ்ய சக்திகளை காணப்படுகிருேம்.

ஸாதாரண கற்களைக்கூட இப்படிக்கொத்த திவ்ய சக்திகளை வழங்கி, மக்களுக்கு உபகாரம் செய் கிற தயவுடனிருக்கும்போது துன்பங்களைத் தர ஒரு விதக் காரணங்களும் கிரஹங்களுக்குத் தோன்ருது- நீயே உன் கர்மாவால் ஏற்பட்ட தொழில் செய்கைக் குத் தக்கபடி பலனை அடையும்போது, லாப நஷ் டங்கள் உன்னிடமே! ஆகையினுலே எந்த விஷயத் தின் பொருட்டும் கிரஹங்களைப் பழி கூருமல் தன்னை

நொந்துகொண்டு சாந்தி அடைவதால், எல்லா க்ரஹ நிலையின் ஆதி காரணத்தை உன்னிடமே அறிவாய்.

சூரிய கிரணங்களுடன் கிரஹாதிகளும் தம் தம் ஒளியைக் கலந்து வீசுவதாலேதான் பல வர்ணங்கள் காணப்படுகின்றன. காலையில் பால சூரியனுகவிருக்கும்போது பல வர்ணங்கள் காண்பதாலும், மாலையிலும் பல வர்ணங்கள் காண்பதாலுமுள்ள அனுபவத்தைக்கொண்டும் கிரஹ நிலையினெளிகளை நிச்சயமாக அறிந்து கொள்ளலாம்-இயற்கையிலமைக்கப் படுகிற பல நிற வஸ்துக்களெல்லாம் கிரஹத்தினுடைய ஒளிமயத்துடன் கூடிய சூரிய பிரகாசம் பட்டதுமே யாவும்!

இப்படியே மனிதர்கள் செய்த கர்மங்களுக்கும் பல நிறங்களாகச் சோபிப்பதைக் கொண்டு, இன்னது செய்யவேண்டுமெனத் தெரியாது தவிக்கிற ஸமயத்திலே குரு முகம் கண்டதும் க்ஷேமமடைகிற ஸமாசாரத்தைத் தெரியப்படுத்தி, தன்னை ஈடேற்றும் பெருமையை அடைகிறுன்.

வியாழ குருமண்டலம்-ஆத்ம குருவாக வந்து உணர்த்துகிறவர் யாரோ அவரே ப்ரஹஸ்பதி! தேவ குரு என்றதால், சித்விலாஸத்தைத் தேடுகிறவருக்கே தேவாம்சம் என்பார்கள்-இந்தப்படியுள்ள சித்விலாஸத்தைத் தேடுகிறவருக்கு சின்முத்ரையாகவே காட்டி, அருள் நிதியை உணர்த்துபவராதலால் ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியாகவும் நாம் போற்றுகிறேம்.

குரு பார்வையினுலே பன்றிக்குட்டிகளையும்கூட அறிவாளியாக்கி பாண்டிய மஹாராஜன் தமது மந்திரி

களாக்கி, கொண்டதாகத் திருவிளையாடல் புராணத்திலே கூறுகிறது. மூட ஜன்மமாக இருந்தபோதிலும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் அருள் வரும்போது நம்மை தேவத்தன்மையாக்கி விடுகிறது.

தனுர், மீனம் இவற்றிற்குத் தகுந்த அனுகூலமாயும் ஆங்கிரஸ வம்ச திலகருமான ப்ரஹஸ்பதி பகவான் தேவ குருவாக அமைந்தது, "நான் ப்ரம்மம்!' என்றுள்ள விசாரத்தாலே ப்ரம்ம ஸ்வரூபமாகிச் சோபிப்பதாலேயே பகவான் என்றும் ஸர்வ குருவென்றும் தங்க நிறமுடைய வியாழ பகவானை போற்றுகிறோம்! இவரது மூலமந்திரமாவது, "ப்ரஹஸ்பதே அதியதர்யோ அர்ஹாத்யும த்விபாதி க்ரதுமஜ்ஜநேஷு, யர்தீதய, ச்சவஸர்த ப்ரஜாத ததஸ்மாஸு த்ரவிணம் தேஹிசித்ரம்!" ஸ்வாஹா:! இந்த மூலமந்திரத்தைக் கொண்டு அக்னியில் ஹோமம் செய்வதால், ப்ரஹஸ்பதி பகவான் த்ருப்தி அடைகிறார்! அருளைப் பெறும்படி ஆக்ஞை யுண்டாகிறது. குரு பார்வையாலேற்பட்ட க்ரஹ பீடை நீங்கி, பரிசுத்தத் தன்மையுடன் சோபிக்கச் செய்கிறார்! ஹோமாதிகளுக்கு இதை ஏற்படுத்தியுள்ளார்கள். ஆனால், நீ குரு மூலம் உபதேசம் பெற்ற மந்திரத்தையும் லக்ஷக்கணக்காக ஜபிப்பதாலும் அந்தர்முகத்திலே ப்ரஹஸ்பதி பகவான் காக்ஷியளிப்பார் என்பதை மறவாதே!

பசு மாட்டை ரக்ஷிக்கிற இடத்தில் விசேஷமாக குரு ப்ரகாசிக்கிறார். கோக்களை பரிபாலனஞ் செய்கிறவனிடம் குருவே கூடவிருந்து கார்யங்களை நடத்துவார். இவருக்குக் கடலை தான்யம் ப்ரியமாயிருப்பது

என்றுள்ள எண்ணத்தைக் கொண்டு புரோஹித னுக்கு வழங்குவதால் குரு திருப்தி அடைகிறார்.

புரோஹித ஸ்வரூபமாக விளங்குகிறவரும்; ப்ரம்மபுத்திரர் என்று புகழ்பெற்றவரும் உடுத்திய துணிகளிலிருந்து நனைந்த நீர்த் துளி விழுந்துகொண்டு ஆசாரமாக ஜபிக்கும் பிராமணர்களுக்கு அனு கூலத்தைத் தருகிறவருமான ஸ்ரீ விஷ்ணு ஸ்வரூப மாகிய ப்ரஹஸ்பதி பகவானுக்கு அளவற்ற நாமங் களால் போற்றி மனதிற்குள் ஜெபிப்பதால், மனம் ஞானவொளியாகி ப்ரம்ம ஐக்யத்தை அடைவிக்கச் செய்கிறவர் எவரோ அவரே ஸ்ரீ ப்ரஹஸ்பதி!

நீ எந்த மந்திரங்களைக் கொண்டாவது சித்த சுத்தி அடைந்தாயானால், சீக்கிரம் ப்ரஹஸ்பதி தர் சனத்தாலே அதற்கும் மேற்படி செல்ல வழி காட்டுவார்.

"ப்ரதிதேவோ ஜ்வலக்ரஹம்!" என்று வியாழ பகவானைப் போற்றுவதால், உன்னுள் ப்ரதிபலிக்கிற தேஜோமய ஸ்வரூபத்தைக் காட்டுகிற க்ரஹம் எதுவோ அதுவே குருமண்டலம். இதன் உண்மையை அறிவதால் நீயே குருவாகிவிடுவாய்.

ஸ்ரீ சுக்ர க்ரஹம். 'ப்ரவ சுக்ராய பானவே பரத்வம் ஹவ்யம் மதீம் சாக்நயே ஸுபூதம் யோதைவ் யானி மானுஷாஜனாம் கும்ஷ்யம் தர்விச்வாமி வித்மனுஜிகாதி!" ஸ்வாஹா! சூரியனுடைய ஒளியை யும் கடந்து தன்னுடைய ஒளி ப்ரகாசிப்பதைப் பாருங்கள்! என்று சொல்வதுபோல மந்தஹாஸ முடன் ப்ரகாசிக்கிற சுக்ர பகவானுடைய பார்வை

பிருப்பதால், பெரும் கவியாகி உலகில் ப்ரஸித்தி பெற்று வாழ்வதுடன், பல ஸந்தானங்களையு மடைந்து, இல்லற வாழ்க்கையை தர்மசிந்தனையுடன் நடத்தும்படிச் செய்கிறார் சுக்ராசாரியார். இவருடைய க்ரஹ நிலையை ப்ரத்யக்ஷமாகக் காண்கிறதுபோலவே இந்த திவ்ய மந்திரத்தைக் கொண்டு ஹோமங்கள் செய்வதால், சீக்கிரம் ஏற்றுக்கொண்டு த்ருப்தி அடைந்தவராக எண்ணியவைகளைக் கைகூடும்படிச் செய்கிறார்.

தினமும், காலையில் மொச்சைக் கொட்டையைத் தட்டில் வைத்து, தர்சனம் பார்த்தாலும்கூட ஸ்ரீ சுக்ர பகவானைப் பார்த்ததுபோலுள்ள பயனை அடைவதுண்டு! இந்த சிரேஷ்டமுள்ள மொச்சையை தானம் வழங்குவதாலும் த்ருப்தி அடைகிறார்!

ஸாதாரண கற்களை ஸ்படிக கற்களாக்கும் தன்மை இவருக்குண்டு! அழுக்கடைந்த பாபங்களைக் கொண்டு மூடியவனாக விருந்தபோதிலும் சுக்ராசாரியருடைய உபாஸனை யிருக்குமானால், ஸ்படிகம் போலுள்ள வெளுமையை உள்ளத்தில் காட்டி ஆநந்திக்கச் செய்வார்!

ரத்தினாதிகளுக்கும் இவருடைய க்ரஹவொளியே காரணம்!

துலா வ்ருஷப ராசிகளுக்கு ஈசனாகவும் ஜ்யேஷ்டா நக்ஷத்ரத்திலே மிகுந்த ஆவலுடையவருமான ஸ்ரீ சுக்ர பகவானை தினமும் போற்றுகிறவர்களுடைய யோக க்ஷேமங்களை ஏற்று, ஒருவிதத் துன்பமுமில்லாது ரக்ஷிப்பார்!

சனியீச்வர க்ரஹம்—ஜ்யேஷ்டா நக்ஷத்திரத்தை பத்தினியாக கொண்டவராதலால், சிரேஷ்டமான பொருளைக்காட்டி ஞானத்தைத் தருகிறவர் ஸ்ரீ சனியீச்வரர் ஒருவரே! விஷ்ணுபக்தியுடனிருக்கச் செய்பவரும் சைவனுகயிருந்து சிவபூஜையினுல் ஏற்பட்ட விஷ்ணு தரிசனத்தை பார்க்க செய்கிறவர் எவரோ அவரே சனியீச்வரர்!

கீழே உள்ளதை மேலே கிளப்பி ஸமத்வ பாவனையை நிலைநாட்டக்கூடிய ப்ரம்ம ஸ்வரூபத்தி லிருந்து கிளம்பியவர் எவரோ, அவரே சாயாதேவிக்கு மகனுக அவதரித்து நீலநிறமாக எங்கும் பரந்த வொளியைத் தருகிற ஸ்ரீ சனியீச்வரரைப் பூஜிப்பதால், விஸ்தார ப்ரம்மம் உள்ளமதில் விசாலமடைந்த ஹ்ருதயாகாசம் காண்பாய்.

இப்படிக்கொத்த ப்ரம்ம ஞானத்தைத் தருவதற்காக உன்னை சோதனை செய்வதானது அனுக்ரஹம் என்று உணர்வதால், சீக்கிரம் சித்தி அடைந்தவனுக ப்ரம்ம ஞானியாகச் சோபிக்கச் செய்கிருர்!

"ஓம் சமக்நிரக் நிபிஸ்கரச் சன்ன ஸ்தபது சூர்ய: சம்வாதோ வாத்வரபா அபச்ரித: ஸ்வாஹா!" இந்த திவ்ய மந்திரத்தைக் கொண்டு சநியீச்வரரை தியானித்து ஹோமங்கள் செய்வதால், நம்மைப் பிடித்த பீடை நீங்கிவிடுகிறது. பரிசுத்தத் தன்மையை அருள் கிருர்! சாந்தியாகிற அக்நியைக்கொண்டு கோபமாகிற அக்நியை அடக்குவதால், சநியீச்வரருடைய அனுக்ரஹம் உண்டாகிறது.

வைராக்யமும் ஆத்மசிந்தனையும் எவர்களிடம் காணப்படுகிறதோ, அவர்கள் விதியால் துதிக்கப்படு

கிற சநியீச்வர பகவானுடைய அனுக்ரஹத்தை அடைந்தவர்களேயாகும்.

காட்டில் வஸிக்கக் கூடிய முனிகளால் போற்றப் படுகிறவரும் அதி ஸுந்தர ரூபத்துடனுமிருக்கிறவர் எவரோ அவர் ஸ்ரீ சநீச்வரர்.

இவருக்கு அதிகம் பிரியமுடைய தான்யம் எள். இதைத் தானம் வழங்குவதால் இவர் அருள் கிட்டு கிறது என்றுள்ள நம்பிக்கையைக் கொண்டு! தானம் வழங்குவதால் நன்மை அடைகிருய்.

வஜ்ர சரீரத்தையும் ஆயுர்பலத்தையும் ஞானத்தை யும் தருகிறவர் ஸ்ரீ சநியீச்வரர் என்றறி.

ஸ்ரீ ராகு ஹ்க்ரஹம்—இவர் அர்த்த சரீரமுடைய வராதலாலும் ஞானத்தை பற்றி போதிப்பிக்கவே பல லீலைகள் புரிவார். ஸிம்ஹவாஹனமுடையவர். கோமேதாபரணமுடையவர். காசியபருடைய குமாரர். அச்வநீ நக்ஷத்திர தாரகமும் மேஷராசி யிலும் உத்பவித்த மஹா புருஷர். சனியீச்வரருக்குத் தோழன். சுக்ராசாரியருக்கும் வேண்டியவர். ஜன்ம கன்யா ராசியில் விளங்குபவர்.

மஹா பாபங்கள் மூடியவரிடம் தான் முக்கிய மாகச் சென்று, பற்பல லீலைகளைச் செய்வார். சிறிது காலம் ராஹுவின் பார்வையிருக்குமாயின், அனுப வித்த கஷ்டங்களைக் கொண்டு பாபங்களைத் திரும்படி செய்து மறைகிறவர் ஸ்ரீ ராகுபகவான்.

பற்பல பாபங்களால் மூடியதைத் தீர்க்க அவருடைய திவ்யமந்திரம்.

"கயானச்சித்ர அபுவ தூதீஸதாவ்ருத ஸ்ஸகா கயாச சிஷ்ட யாவ்ருதாஸ்வாஹா! இந்த திவ்ய மந் திரத்தை சொல்லி பலதடவை ஹோமம் செய்வதால் பாபம் விலகி நீசத்தனம் தீர்ந்து விடுகிறது.

இவருடைய பார்வையினுலே சித்ரவேலைகள் அழகாக அமைகிறது. மாஷம்—உழுந்து இவருக்கு சேர்ந்தபடியுள்ள இவரால் ஏற்பட்டது என்று கூறுவர். ஆகையினுலே உழுந்தை தானம் வழங்கு வதால் சண்டாளத்தனம் விட்டுவிடுகிறது.

நல்ல அழகுடைய ஒன்றை மறைக்காது காத்துக் கொள்ள நீ யல்லவா? முயற்சிக்கவேண்டும்? அதற்காக சந்திரனை மறைத்த ராஹுவைப்போல தென்பட்டாலும் சிறிது நேரத்திற்கெல்லாம் தெளி வடைந்து விடுகிற சந்திரனைப் போல, நீயும், உன் னுடைய பூர்வம் செய்த கொடும்பாபங்களால் மூடிய வனாக தென்பட்டாலும் முயற்சி செய்து ஆழ்ந்து ப்ரம்ம விசாரத்தாலே தெளிவடை. ஸ்ரீ ராகுவை த்ருப்திப்படுத்தவும் நம்முடைய வியாதிகளை தீர்த்துக் கொள்ளவும் ஒரே வழிதானுண்டு! அதாவது அமா வாசைகளிலும் ப்ரதி சனிக்கிழமைகளிலும் அரச பிரதக்ஷணம் செய்து நாக ப்ரதிஷ்டை செய்த நாகரை யும் ஸேவிப்பதால் நம் வியாதி தீர்ந்து விடுகிறது.

சந்திரன் உதிக்காத இருட்டடைந்த தினங் களிலே ராகுவினுடைய ஒளி நிறைந்து மேகவர்ண முடையதாக விளங்கும்! பூமிக்கும் ராகுக்ரஹத் திற்கும் ஒற்றுமை யிருப்பதாலே பூமியில் அச்வ மரத்

தடியைதான் குடியிருந்து கோவிலாக காக்ஷியளிப் பதை மறக்க முடியாது.

காலையில் ஸ்நானம் செய்து நனைந்த துணியுடன் அரசப்ரதிக்ஷணம் செய்து நாகபகவானையும் பிள்ளை யாரையும் ஸேவிப்பதால் ஸர்வ விக்நங்களும் தீர்ந்து வியாதியற்றவனாகி விடுகிறான். பிரதிக்ஷணம் செய்கிற காலத்திலே நனைந்த துணியாக யிருக்கவேண்டிய தவசியம்.

அரசமரத்தின் காற்று, நனைந்த துணியூடே தேஹத்தில் படுவதால் மறைந்த அரக்கெட்டு வியாதி யும் சிற்சில அங்கங்களுடைய வியாதிகளையும் தீர்ந்து விடுகிறது என்பது நிச்சயம்!

அத்துடன் நில்லாது பல ஆஹாரங்களையும் நாக ருக்கு. நேவீதித்து அங்குள்ளவர்களுக்கு வினியோகிப் பதாலும் தன்னுடைய பாபங்களை பங்கிட்டு கொடுப் பதுபோலுள்ள விஷயங்களை சூசனையாக காட்டி, பெரியோர்கள் அரச பிரதிக்ஷணமும் நாக ப்ரதிஷ்டை யும் நாகர் பூஜையும் செய்வதால் விஷபாதையிராது! நோய் நொடி வராது! என்றெல்லாம் புகழ்ந்தார்கள்! அதுவுமல்லாது தாங்களும் அனுஷ்டித்தும் வந்தார்கள் என்பதை அறி!

இப்படியிருக்க ஒரு சிலர் "நம்மை பாபங்களிலே தூண்டிவிடுவதும் பகவான்தானே! அந்த பகவா னுக்கு ஏன் நல்லதை செய்ய சொல்லக்கூடாது?" என்று வாய் வேதம் பேசிவிடுகிறதுண்டு. இருந் தாலும் இதொரு நிலைமையில் மூடியவனாக சந்திரக்ர ஹணத்தைப்போல சிறிது நேரமேதான் சொல்வான்—

தெளிவடைந்து விட்டாலோ "இல்லை. நாமேதான் நம்முடைய துன்பங்களைச் செய்ய காரணமாயிருக்கிறோம் என்பதை அறியும்போது ஸ்ரீ ராகுபகவானுடைய லீலையை உணர்ந்தவனாக ஞானத்தை அடைவான்.

உஷ்ணத்தாலேற்பட்ட விஷத்தை தருகிறவராதலாலும் அம்ருதமும் அவர் சாப்பிட்டதாலே அம்ருதாம்சம் இல்லை என்று நினைக்காதே! உன்னுடைய கொடும் செய்கையென்னும் விஷத்தை நீக்கியதும் அம்ருதமென காக்ஷியளிக்கும் விஷ்ணுமூர்த்தியாக நீலநிறமுடையவராக காக்ஷியளித்து ப்ரம்மஸ்வரூபத்தை விளக்குகிறார்.

நீ அம்ருதமுடையவனாகிவிட்டால் அம்ருத புருஷனாக திவ்ய தர்சனத்தை மறைக்காமல் ராகு பிடிபட்டு விட்ட பூர்ண உதயத்தை காண்கிறாய்! ஸ்ரீ கேது க்ரஹம். இவரும் அவருடைய தோழரே! உடன் பிறந்த ராகுவின் தம்பி! இவர் தான் மோக்ஷத்தைக் கொடுத்து முக்தி ஸ்தானத்தை காட்டுகிறவர் என்பதை மறவாதே! இவர் ஒருவருக்கும் தீங்கிழைக்காதவர்! ஸம சிந்தனையுடையவர்! ஞானத்தை போதிக்கும் குருவை காட்டக்கூடியவர்! த்ருகாலங்களையும் தனக்கு வாஹனமாக்கிக் கொண்டவர்! குரு, தைவம், ஆத்மா என்ற நாமரூபங்களை கடக்க வழி காட்ட கூடியவர். இவருடைய மூல மந்திரமாவது, "ஓம் கேது: க்ருண்வன்ன கேதவே பேசோமர்யா அபேசஸெ, ஸமுஷத்பிர ஜாயதா: ஸ்வாஹா!" இந்த திவ்ய மந்திரத்தைக்கொண்டு ஹோமாதிகள் செய்

வதால் பாபஹேதுக்கள் நம்மை விட்டு விலகி பரிசுத்தத்தன்மையை அளிக்கிறது.

ஜைமினி கோத்ரமுடையவர்! ம்ருத்யு புத்திரர் என்று அழைக்கப்படுவதால் பாபங்களாகிய ம்ருத்யு வைக் கொண்டு மூடியவர்களிடம் விசேஷமாகக் காணப்படுகிறதால் ம்ருத்யு புத்திரன் என்றும் அழைக் கப்பட்டார். இருந்தாலும் அம்ருதம் கிடைத்ததை உண்டதினுலே வெட்டுண்டவராயினும் உயிருடன் சோபித்து அம்ருத நிலையையும் வர்ஷிக்கும் தன்மை முதலிலில்லாவிட்டாலும் முடிவில் அம்ருதத்தை அளிக்கக் கூடியவருமாவர்!

ஒன்றை கற்பித்து அதனை உயிருடனிருப்பது போலுள்ள தன்மையை அளிப்பவர் கேது பகவான். சித்ரமாயினும் அதனை உயிருடையதாக்கும் சக்தி ஸ்ரீ கேது பகவானுக்கு இருப்பதால், உள்ளமதில் உபாஸிக்கக்கூடிய மூர்த்தியைப் போலம்படி அருளி ப்ரம்மஸ்வரூபத்தையும் விளக்கி உயிரை ரக்ஷிக்கும் தன்மையுடையவர் கேது பகவானுக்குண்டு!

சித்ர துவஜமுடையவர்! சாயா படத்தைக் காட்டி அந்திய க்ரஹமுடையவர்! நவம க்ரஹமுடை யவர்! இவைகளாலே சோபிக்கக்கூடியவர்! பதஞ் சலி மஹரிஷிக்கு தபோ மகிமையை உணர்த்தியவ ராதலால் நம்மையும் ரிஷித்தன்மையாக்கும் பெருமை கேது பகவானுக்குண்டு. இவருடைய பார்வையாகிற ஜ்வாலையினுலே வைடூர்யம் முத்துக்கள் முத லியவைகள் இயற்கையிலேயே உண்டாவதை நாம் பார்த்து வருகிறோம்! அது இவருடைய திவ்யஜ்வாலை

யினுலேற்பட்ட சூர்யரச்மியுடன் கலந்து கற்களில் படுவதால் வைடூர்யங்களாகிறதென்பதை உணர வேண்டியது.

இவரை நினைத்து, கொள்ளு தானம் வழங்குவதால் த்ருப்தி அடைகிருர்! கொள்ளு உஷ்ணம்! அவருடைய செய்கையும் உஷ்ணம்! செய்கையினுலேற்பட்ட இடுப்புவலி, கால்வலி உடம்புவலி, முதலிய வலிகளை தீர்க்க! கொள்ளுதானம் வழங்குவதாலும் கொள்ளை உள்ளே சாப்பிடுவதாலும் வலியோ நோய்களோ தீர்ந்துவிடுகிறது, இது ப்ரத்யக்ஷம்.

குரு கடாக்ஷம் ஏற்படும்போது கேது தசையுடையவனுக்கு நன்மை அளிக்கிறது. உயிரை ரக்ஷிப்பதின் பொருட்டு பல கஷ்டங்களை தந்தாலும் அதனை பொருட்படுத்தாது ஸஹிப்புத் தன்மையுடனிருப்பதே குரு கடாக்ஷம்!

ஸ்ரீ கேதுக்ரஹமென்னும் ஸஹிப்பு தன்மையும், ஸ்ரீ ராகுக்ரஹமென்னும் தீரத்தன்மையும், ஸ்ரீ சனையீச்வர க்ரஹமென்னும் சங்கர நாராயண பக்தியையும் கொண்டு ஸ்ரீ சுக்ரக்ரஹமென்னும் பரிசுத்த ஸ்படிகம்போலுள்ள கவிகளைப்பாடி, ஸ்ரீ வியாழக்ரஹமென்னும் ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியின் சின்முத்ரை கண்டு, ஸ்ரீ புதக்ரஹமென்னும் வித்வானுகி, ஸ்ரீ செவ்வாய் க்ரஹமென்னும் அம்பிகை புத்ரனுகி, சந்திரக்ரஹமென்னும் சாந்த நிலாவை புஜித்து, ஸ்ரீ சூரியக்ரஹமென்னும் ஹ்ருதயத்துள் ஆதித்யனை கூடு! சாந்தி.

ஸாக்ஷாத் ஸ்ரீ அம்பிகையினிடத்திலே இந்த திவ்ய நவக்ரஹங்களும் நவஸித்திகளாகயிருப்பதால், ஸ்ரீ அம்பிகையை உபாஸிக்கிறவனுக்கு க்ரஹங்களாலேற் படுகிற பீடைகள் இல்லாது ரக்ஷிக்கும் பொறுப்பை ஸ்ரீ அம்பிகை ஏற்றுக்கொண்டு யோகக்ஷேமங்களை நடத்துகிருள் !

நீ செய்யக்கூடிய ஸத்கர்மாவையும் ஸ்ரீ அம்பிகைக்கே அர்ப்பணமாக செய்வதால் ஸ்ரீ அம்பிகையே தன்னொளியால் க்ரஹம் முழுதும் வீசி சாந்தமென்னும் நிலாவை புஜிக்க செய்து ஆத்மாநந்த மென்னும் அம்ருதத்தை தருகிருள் என்பதை மறவாதே !

1. ஸ்திரீகளாயினும் சரி, புருஷராயினும் சரி ! தம்முடைய யௌவன வாழ்க்கையிலே தம்பதி களுடன் சுகம் பெற்ற அனுபவத்தை கடவுள் வசால் சுகத்தை விட ஏற்பாடு செய்தாளுயின் திடீரென்று விட்டுவிட முடியாது சுகத்தை விடணமென்றும், சுகத்தைவிட மனமில்லாதுமிருப்பதுமான சஞ்சல தன்மையிலிருந்து துடங்குவதான கேதுதசையானது முடிவில் துறவியாக்கி பேரானந்தமடைய செய்யும்.

2. தன்னை, இந்த உடலுக்கு சேர்ந்த விஷய வாஸனைகளாகியவைகள் மறைக்கக் கூடியதாகயிருப் பதை ஸ்ரீ ராகு உணர்த்தி பூர்ண தர்சனத்தைக் காண, உதவி செய்து விடுபட்டு மறைந்து விடுகிறது ராகுதசை.

3. ஸ்வாமி அதுவாயிருக்கலாமோ? இதுவா யிருக்கலாமோ? என்று பேத புத்தியில்லாது ஒரே

நிச்சலத்தன்மையை உணர்த்தி ஸ்ரீ சங்கர நாராயண ஸ்வரூபத்தை ப்ரத்யக்ஷப்படுத்த உதவி செய்து மறைகிறவர் **ஸ்ரீ சனைச்சுவரர் !.**

4. அளவுக்கெட்டாத ப்ரகாசத் தன்மையை நினைத்து மடைதிறந்த வள்ளம்போல, அனுபவித்து கவிகளைப் பாட அருளி மறைகிறவர் **ஸ்ரீ சுக்ராசாரியர்.**

5. தான் அனுபவித்த ஆனந்தத்தை இன்னுமுள்ள தன்னை சேர்ந்தவர்களேயும் ஆநந்திக்க செய்ய வேண்டுமென எண்ணத்திலை அபய வரதம் அளித்து மறைகிறவர் **ஸ்ரீ வியாழ பகவான்.**

6 தான் படித்தவனுயிருந்தும் " நாம் படித்தது ஒரு கைய் அளவுதான் ! இன்னும் உலகளவுடைய வித்தைகளை படிக்க யாரால் ஸாத்யம் ! என்று கர்வ மடையாத சாந்தி அடைந்து மேதாவியாகச் சோபிக்க செய்து மறைகிறவர் **ஸ்ரீ புத பகவான்.**

7. வியாதியுள்ளவரை காப்பாற்றுவது ! ஞானத்தை பற்றி போதிப்பிப்பது ! தாய் பராசக்தியின் பக்தியை பரவ செய்வது ! கடைசியில் தன்னையும் மூர்த்தியாக்கி மறைகிறவர் ஸ்ரீ செவ்வாய் பகவனுகிய ஸ்ரீ சுப்ரமண்யர்:

8. களங்கமுடைய மனதை ஸ்திரத்தன்மையாக்கி உள்ளத்தை நல்ல அழகுடையதாக செய்து ஜீவன் முக்தர்களான பெரியோர்களுடைய ப்ரகாச அருளையும் காட்டி மறைகிறவர் ஸ்ரீ சந்திர பகவான்.

9. ஸுவர்கம், பூமி, அந்தரிக்ஷம் முதலிய இடங்களிலே எந்தந்த லோகங்கள் உண்டோ அந்தந்த

லோகங்களுடைய அதிபதிகளுக்கும், சராசரம் முழு துக்கும் எந்த ப்ரம்ம ஸ்வரூபத்தினுடைய ஒளி கிடைக் கிறதோ, அந்த ப்ரம்மத்தை காண்பித்தருளி மறை கிறவர் ஸ்ரீ சூர்ய பகவான். ஆகவே ஒவ்வொரு க்ர ஹாதிகளும் ப்ரம்மத்தை அடைய படிப்படியான நிலைமையை உணர்த்தி அருள் புரிகிற வகைகளான தேவதாம்சங்கள் நிறைந்த புருஷோத்தமர்கள் ஆவார்.

நவக்ரஹாதிபதிகளும் ப்ரம்மத்தை அடைந்த வர்களேயாயினும் தம் தம் தொழில்களை தான் விட் டாலும், விடாமல் நடத்திவரும் சக்தி கூடவேயிருப் பதால் தன்னை அறியாமலேயே, குணங்களுக்கு தக்க படி கார்யங்கள் நடந்துவிடுகிறது—முக்குணங்களையும் கடந்து ஜீவாத்மாவைக் கண்டதும் பராசக்தியின் அருள் உண்டாகி நவக்ரஹ நிலைகளும் நவஸித்திகளாக ஸ்ரீ அம்பிகையைச் சுற்றி ஆலவட்டம், வஞ்சாமரம், குடை முதலியவற்ருல் ஸேவித்து நிற்பதைக் காணும் போதுதான் "நான் ப்ரம்மம்!" என்பதை உணர் வாய்—சாந்தி.

நவக்ரஹங்களும் விஸ்தாரமடைந்து உள்ள முடைய ப்ரம்ம ஞானியின் ஆத்மாநந்தத்தைப் பருக சுற்றி சுற்றி வண்டுகள் தேனை அருந்துவதுபோல, தம் தம் நாதங்களைக்கொண்டு போற்றுவதை, ப்ரம்ம ஞானி தம்முடைய ஏகாந்தத்திலேயே இருப்பதால் இவர்களுடைய துதியையும் கேட்டு பேராநந்தம் அடைகிருர்—

ஸ்ரீ அம்பிகையின் ஹ்ருதயத்துக்கு நவாவரண மாக யிருக்கிறது நவக்ரஹங்கள்—நவமணிகளால்

கோர்க்கப்பட்ட மாலையை அணிந்திருக்கும் அம்பிகையைப் பூஜிக்கிறவனுக்கு க்ரஹ பீடைகள் இராது. க்ரஹம் பரிசுத்தமாகவே இருக்கும்.

கேட்டல், காணல், மோப்பு, ருசி, ஸ்பர்சம் முதலிய விஷய வாஸனையினுலே இழுக்க, ஜீவன் உடலை அடையும்போது அதாதின் தொழிலுக்கு தகுந்தபடி காது, கண், மூக்கு, நாக்கு உடல் முதலிய இந்திரியங்களை அடைகிறதற்கு, இந்த விஷய வாஸனையினுலே ஏவப்படுகிறபடி செய்கைக்கும் தக்கபடி க்ரஹ நிலைகள் அமைந்துவிடுகிறது. ஆகவே க்ரஹாதிகள் முதலிலேயே உன்னை அடைகிறதில்லை! நீ பரமாத்மாவினிடமிருந்து நழுவி ஜீவனுக மாறி விஷய வாஸனைகளை ஏற்கும்படி நேரிடுகிற காலத்திலே உன் செய்கைக்கு தக்கபடி க்ரஹாதிகள் அமைந்துவிடுகிறது.

தவிர க்ரஹாதிகளுக்கு உன்னிடம் பகையோ, விருப்பமோ கிடையாது என்பதை அறி!

பின்னும் நவக்ரஹாதிகளை நம்முடம்பிலுள்ள நவ துவாரத்தைக் குறிப்பிடலாம். சூரியன், சந்திரன், செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனீச்வரன் முதலியவர் முகத்திலும் மாறி மாறி வருவதால் ஒரே தன்மை ஏற்படக்கூடிய ஸந்தர்ப்பமானது உள்ளத்தில் ஆதித்யனுடைய ப்ரகாசத்தை விஸ்தாரமாக அடைந்ததும் இவைகள் ஒன்ருக ப்ரகாசிப்பதை காணலாம்.

இராகு, கேது முதலியவர்கள் இராகு லிங்கபாகமும், கேது அபான பாகமுமாக கொள்ளலாம். இவர்

களது செய்கையினுலேதான் சீக்கிரம் ப்ரம்மத்தை அடையவும் பாதாளத்தில் விழவும் ஸாத்யமாகிறது. பெண் மோஹத்திற்கு இட்டு செல்லாதபடி இராகு பாகததை அடக்கினுல் மட்டுமே மேலே செல்ல முடியு மென்பது நிச்சயம். இயற்கையாக அமைந்திருக்கிற இராகு, லிங்கத்தைப் பார்த்து கீழ் நோக்கி யிருப் பதால் பெண் மோஹத்திலீடுபடுவது ஸகஜமாயிருக் கிறது. இந்தப்படி இயற்கையில் அமைந்துள்ள கீழ் நோக்கி யிருக்கும் இராகுவை இடைவிடாத ஏகாக்ர சித்த தியானத்தினுலே கீழ் நோக்கி யிருக்கும் இராகுவை மேலே கிளப்பியதும் இராகுவின் வாயி லிருந்து ஜ்வாலே உண்டாகிறது. அந்த திவ்ய சக்தி யைக் கொண்டே விஷய வாஸனேகள் தீர்ந்து பெண் ணுசை நம்மை விட்டு விலகுகிறது.

முதலில் சந்திரனே மறைத்த இராகுவைப்போல நம்மையும் நம்முடம்பில் கீழ் நோக்கி லிங்க ஸ்தா னத்தை அடைந்து பெண்ணுசையென்னும் திரையால் மறைக்கப்பட்டிருந்து பிற்பாடு ஞானமேற்பட்டு ஏகாக்ர சித்த த்யானமும் கை கூடியபோது பெண் ணுசையென்னும் இராகு பிடிபட்டு விட்ட பூர்ண சந்திரனேப்போல ப்ரம்ம ஸ்வரூபத்தை உள்ளமதில் விசாலமாக கண்டானந்திக்கலாம்.

அபானவாயு ஸ்தானத்திலே கேதுவை கற்பிப்ப தாலே அபான வாயு சேஷ்டைக்கு உட்பட்டவர் என்று சொல்வதற்கில்லே. நீயே உன்னுடைய ஆஹார விஷயங்களேப் பொறுத்து அபான வாயு அமைகிறது. நீ ஸத்வ குணமுடைய ஆஹாரத்தைப் புஜிப்பதால் அபான வாயு உன் கட்டுக்கு அடங்கி யிருக்கிறது.

ஆஹார நியமப்படுத்தி அபானத்தை கட்டுப்படுத்தினுல் மட்டுமே ஞானமுண்டாகுமென்பதை கேது அறியப்படுத்துகிருர். இராகுவும் கேதுவும் லிங்க ஸ்தானத்தையும் அபான ஸ்தானத்தையும் அடைந்ததுபோல அவர்களை துதிப்பதாலுள்ள தன்மையானது கேவலமென்று எண்ணக்கூடாது. மனித இயற்கைக்கு தக்கபடி முதலில் வேண்டியது நமக்கு காமயிச்சையில்லாதிருப்பது, ஆஹார நியமம். இவைகளேயாகும்—என்று போதிப்பிக்கிற தன்மையிலிருக்கும் இராகு கேதுவை உண்மை ஞானத்தை நமக்கு தெளிவுபடுத்துகிருர்கள் என்பதை நினை! ஸாதாரணையென்று வெறுத்து தள்ளாதே! ஈச்வராம்சம் மூலஸ்தானத்திலேதான் பொருந்தியிருக்கிறது. பெண்ணுசையென்னும் க்ரஹணத்தால் மறைத்துக்கொள்ளாமல் மூலஸ்தானத்திலிருந்து கிளம்பிய பூர்ண சக்தியை அறிவாயாக! இது அபானன் கட்டுபாட்டால் ஏற்பட்ட பிருணன் லயமாகும் மார்க்கம்!

அபானன் கட்டுப்படாமல் மீண்டும் மீண்டும் க்ரஹணத்தாலே மறைக்கப்பட்ட ஜீவன் பல பிறவிகளிலே வீழ்ந்து வீழ்ந்து பிறந்து இறந்து உழல்வதான மார்க்கத்திற்கும் இந்த இராகு கேது என்ற இரு த்வாரத்தாலேற்படுகிறதுதான்—நல்லதை அடையவும் கெட்டதை மேற்கொள்ளவும் செய்கிற அபான துவாரங்களாலேற்படுகிறதை அறிந்து, குரு உபதேசப்படி ஜப யக்ஞத்தால் மெல்ல மெல்ல ஏகாக்ரசித்த தியானத்தை அடைந்துவிட்டால் தன் குற்றம் தனக்கே விளங்கி க்ரஹணம் மறைந்து விடுபட்ட பூர்ண உதயத்தை பரமாத்மா தரிசனத்தைக் காண்கிருய்.

பிருணனிலிருந்தே அபானன் உண்டாயிற்று! ஆயினும் அபானன் பிருணனில் ஐக்யமாகும்போது இராகு, கேது, சந்திரன், சூர்யன், முதலிய நாம ரூபமேயில்லாத ஒன்றே நீயாகிவிடுகிருய்! இதுதான் ஸச்சிதானந்த சாந்த ஸமுத்ரத்தின் வாயிலில் குளித்து, குளித்து மூழ்கிக்கொண்டேயிருப்பதுதான் தியானத் திஞல் ஏற்பட்ட ஸமாதி நிலையாகும்.

சிறிது நேரமாவது இந்த அனுபவத்தை அடைந் தால் மட்டுமே நவக்ரஹ நிலைகள் நம்முடம்பில் நவ துவாரத்திலே ஒவ்வொரு தன்மையுடனிருப்பதை ப்ரத்யக்ஷமாகக் காணலாம்.

இதுவரை லிங்கதுவாரத்தையும் அபானதுவாரத் தையும் பற்றிய விஷயங்களை ஆராய்ந்ததுபோல உடலி லமைந்த முக மண்டலத்திலும் ஏழு துவாரமிருக் கிறதே; அதிலும் ஸப்த க்ரஹாதிகளுடைய தர் சனத்தை அனுபவமாகவே அறிந்துகொள்ளலாம்!

சூரியனுல் கண்கள் ஏற்பட்டது என்பது ப்ரஸித் தம்! கொழுந்து விட்டெரியும் அக்நியைப் பார்க்கும் போது ஸ்வரூபம் தென்படுகிறது. அதையே உள் முகத்திற்கு திருப்பி பார்க்கும்போது ஆதித்யனுக தென்படுகிறது. சூரியனுல் ஏற்பட்ட அக்நியின் அம்ச மிருப்பதாலே பார்வையாகிய கண்கள் உண்டாயிற்று. இந்த கண்களாலேயே நல்லதையும் கெட்டதையும் அடைகிறதற்குக் காரணமும் உண்டாகிறது. அழ குடைய வஸ்துவில் பார்வையாகிய அக்நியில் செலுத் தும்போது உள் பார்வைக்கு ஆதித்யனுடைய தேஜ ஸைக் காண தடஸ்தம் ஏற்படுகிறது. அழகுடைய

வஸ்துவிடம் ஆசையை செலுத்தாமல் கண்களை உள் முகம் திருப்பி பார்க்கும்போது விஸ்தாரமடைய ஹ்ருதயத்துள் ஆதித்யனை காணும்போதுதான், சூரியனுடைய முழு பார்வையையும் நீ உணர்வாய்!

த்ருஷ்டியினுலேற்பட்ட சூடானது ஜ்வரமாகக் காண்பதை ப்ரத்யக்ஷமாக காண்கிறோம்! அந்த சூடு கண்களுக்கு சூரியனுடைய அம்சமில்லாவிடில் பார்வையின் மூலம் சூடு வருவதற்கு வழியிராது. ஆகவே கண்கள் சூரியாம்சம் நிறைந்தது என்பதை அறி!

சந்திரனும் சூரியனுடைய ப்ரதிபிம்பமானபடியால் சந்திரனுடைய தன்மையும் கண்களில் காணப்படுகிறதுண்டு! நல்ல அழகுடைய ம்ருதுவான வஸ்துவில் பார்வையை செலுத்தும்போது, சந்திரனுடைய தன்மையை முதலில் அடைந்த பிறகுதான், அது கிட்டாதபோது அக்நிக்குரிய தாபத்தை அடைகிறுன். ஆகவே முதலில் சந்திரனுடைய தன்மை கண்களுக்கு வந்த பிறகு (சூரியனுடைய சூட்டினுல்) பார்வையாகிற கோபத்ருஷ்டியினுலே மோதப்பட்டு தாபத்தை அடைகிறுன். பார்த்துக் கிட்டாதபோது உஷ்ணத்தை அடைந்து கோபத்திற்குள்ளாகாமல் சந்திர சூரியர்களுடைய தன்மை ஒன்றே! "நாம் ஏன் வீணுகப் பார்த்து ஆச்சர்யப்பட்டு மோஹமடைந்து பள்ளத்தில் வீழ்வது சரியில்லை!" இந்த சந்திர சூரியர்களுடைய அம்சங்கள் நிறைந்த கண்களைக்கொண்டே அவைகளுக்கு மப்பால் விளங்குகிறதைக் காண முயற்சி செய்து வந்தால் பூமியைப்போல பொறுமையுடனிருக்க செய்து பூமிசுதன் என்று பேர் பெற்ற தேஜோமயமாக இரண்டு கண்களுக்கும் மத்தியில்

செவ்வாய்க்ரஹ அதிபதியாகிய சுப்ரமணியை காண்பாய்! இது சந்திர சூர்யர்களான இரண்டு கண்களை கட்டுப்படுத்தி, ஒரே நோக்கமாக அமைந்தபோதுள்ள ஞான த்ருஷ்டியானது ஸ்ரீ சுப்ரமண்யரை தேஜோமயமாக காட்டுகிறது.

ஒருவனை ஜ்வரமுடையவனாக செய்வதும் கண்! ஜ்வரமடைந்தவனை எழுப்ப செய்வதும் கண் த்ருஷ்டியால் ஸாத்யமுண்டு! இந்த இரண்டு வகையும் காண்பதால் சந்திரர் சூரியர்களுடைய அம்சமே கண்கள்! என்பது நிச்சயித்துக் கொள்ளலாம்.

செவ்வாய் சனைச்வரக்ரஹ துவாரம், மூக்கின் இரண்டு துவாரத்தைக் குறிப்பிடலாம்! பூமிக்கும் வாஸனை குணம் நிறைந்திருக்கிறது. மூக்கிற்கும் வாஸனை குணமுண்டு! ஆகவே பூமிக்கு சேர்ந்த செவ்வாய் கிரஹமும் பூமிக்கு த்ருப்தியை அளிக்கக் கூடியதான சனைச்வர க்ரஹமும் நம் மூக்கின் த்வாரத்தை அடைந்து நம்முடைய பாப புண்யத்திற்கு அனுஸரணையாக வாஸனா விஷயங்களை அனுபவிக்க செய்கிறார்கள்!

மூக்கின் நுணியின் தாரணையினாலே விஷய வாஸனைகளை அறிந்து (கருடனைப்போல மேல் பறந்து கீழேயிருக்கும் வாஸனைகளை அறிந்து தாக்குவது போல) தாரணையினாலேற்பட்ட சிதாகாயத்துள் நுழைந்து விஷய வாஸனைகளை தாக்கிவிட்டு தம் சரீரத்தை பரமாத்மாவுக்கு வாஹனமாக நினைத்து தியானம் செய்யும்போது சங்கர நாராயணஸ்வரூபம் சுப்ரமண்ய ஸ்வரூபம் முதலிய திவ்ய தர்சனங்களை

காணும்போதுதான் செவ்வாய் சனைபீச்வர க்ரஹ மகிமையை உணர்வாய்!

புதக்ரஹம் வாயிலிருப்பதாக ஒப்பிடலாம். ஜனன மரணமாகிய வியாபாரத்திற்கு உட்படுத்தி ஆகாராதிகளை உட்கொண்டு மீண்டும் மீண்டும் செல்வதற்கும், நாவின் ஊற்றை கட்டுப்படுத்தி ஆசை முதலியவற்றை அடக்கி ஆளும்போது உண்மையாக புதக்ரஹம் கண்டதும் உன்னுள்ளம் மலங்களில்லாத பரிசுத்த ஹ்ருதயமாக காட்டுகிறது. நாவிலிருந்து சரமாரியாக வேதங்களைப் பாட செய்கிறது. அதி வித்வானுக்கிவிடுகிறது.

வலது காதின் துவாரத்தை வியாழ க்ரஹமாகவும், இடது காது துவாரத்தை சுக்ர க்ரஹமாகவும் ஒப்பிடலாம். தெளிவிட முடியாத ஆகாயத்தினுடைய நிறைந்த தன்மை காதுகளுக்கு உண்டு! கேட்டு ஆநந்திப்பது ஒன்று! கேட்காமல் மனதினுள் ஸ்மரணையினலே ஏற்பட்ட சப்தத்தைக் கேட்டு ஆநந்திப்பது ஒன்று.

ஸ்மரணையினலே சப்தத்தைக் கேட்டு ஆநந்தமடைவது வியாழ க்ரஹத்தினுடைய அம்சம்! ஸாதாரணையாகக் கேட்டு ஆநந்திப்பது சுக்ராம்சம்! முதலில் சுக்ராம்சத்தை அடைவது ஸகஜம்! ஆயினும் ஸ்மரணத்தினல் ஏற்பட்ட சப்தமானது மனோலயம் கிடைக்க ஸாத்தியமாகிறது.

வலது காதின் துவாரத்திலே கங்கையும் குடி கொள்வதுண்டு! என்னவென்றுல் எல்லாவற்றிற்கும் பெரிய பொருளாகிய ப்ரஹஸ்பதி பகவானை

ஸேவித்து ஸேவித்து தானும் ப்ரம்மஸ்வரூபமாகி ஸச்சிதாநந்த அம்ருத கடல்போல பக்தாளுக்கு தியான மென்னும் கங்கையை காட்ட குருவின் மூலம் வலது செவி துவாரத்தை அடைந்து ஆநந்திக்கிறார் என்பது ப்ரத்யக்ஷம்—

உதாரணமாக நீ வெளியில் எங்கேயாவது சென்று வீட்டினுள் வந்தால் நீராட ஸமயம் கிடைக்காவிடின் மூன்று தடவை வலது காதை ஆசமனீயம் செய்தால் பரிசுத்தனாகிவிட்டாய் என்பது நிச்சயம்—இவ்வளவுக்கு உன்னுள்ளம் பக்குவமடைந்து த்யானமென்னும் கங்கையை நினைத்து நினைத்து குரு கடாக்ஷமுடைய செவியை தொடுவதாலே ஸதா பரிசுத்தம் என்பதை அறிய வேண்டியது.

பெண்ணாசை யென்னும் லிங்க துவாரத்தை அடக்கி, இராகுவை மேலே கிளப்பி ஏகாக்ரசித்தமடைந்து நழுவாமலிருக்க அபான வாயுவையும் அடக்கி, வாய் ருசியை சபலத்தை அடக்கி, புதக்ரஹத்தை நாடி வித்வானாகி, ஆநந்திப்பதான சுக்ர துவாரமும் ஸர்வம் ப்ரம்ம மயம் என்று நிராமயமென்னும் சனைபீச்வர க்ரஹத்தையும் கூடி செவ்வாய்க்ரஹமென்னும் சுப்ரமண்யரே தானாகி, ப்ரஹத் யென்ற ப்ரம்மஸ்ரூபமாகி அதுவே நான், நானே அது! என்ற நிலைமையை ஸமத்வ நிலையை அடை.

எங்கங்கேயெல்லாம் ஸமத்வ நிலையை காண்கிறதோ, அங்கே சனைபீச்வரருடைய அருள் என்றறி! எங்கங்கேயெல்லாம், "பகவானைக் காண முயற்சித்தும் பயனை அடையாது தத்தளிக்கிற ஸந்தர்ப்

பத்திலே எது செய்ய வேண்டுமென்று அறியாது மனம் தளர்வு அடைகிற தருணம், ஞானத்தைபற்றிய பேச்சு உண்டாகிற இடத்திலே கேது விசேஷமாக சோபிக்கிறர்." என்றறி !

எங்கங்கேயெல்லாம் " படித்த வித்வானுகி மக்களுக்கு உபதேசிப்பதிலே வெகு சிரத்தையுடனிருக்கிறதோ, தன்னைப்போல காண்கிறவர்களிடத்திலேயும், தாயை, கருணை ; தன்னை அண்டியவர்களிடத்திலே நல்வழியில் திருப்புவதற்காக கோபம் கொள்கிறவரிடத்திலேயும் விசேஷமாக குரு வியாழமண்டலம் ப்ரகாசிக்கிறது என்பதை அறி !

எங்கங்கேயெல்லாம், " அருள் கவிகளாகப் பாடி மக்களை ஆநந்திக்க செய்கிறதும், பொருள் இச்சையை பூர்த்தி செய்து ஆத்மாநந்தம் கொள்ள செய்து த்ருப்தி அடைகிற இடத்திலே சுக்ராம்சம் இருப்பதாக நினை !

" காட்டுடே போகும்போது பல திருடர்களால் மோதப்பட்டு நடுவிலே நிற்கும் அறிவாளி எந்த வித்தையை கொண்டு அவர்களிடமிருந்து தப்பித்து ஜயம் அடைகிருனே அந்த இடத்தில் விசேஷமாக புதாம்சம் விளங்குவதாக அறி !"

எந்த இடத்தில் இல்லற தர்மமும் தாம்பத்தியமும் நிறைந்தாக காண்கிருயோ அந்த இடத்தில் செவ்வாய் அம்சம் நிறைந்திருப்பதாக நினை !

எந்த இடத்தில் மன திருப்தியோடு எவ்வித கார்யாதிகளையும் செய்து பற்றுதலற்று சுகமோ துக்கமோ எதுவும் ஸம பார்வையுடனிருக்க அம்பிகை

யின் முக தர்சனத்தை காண்கிறதோ அங்கே சந்தி ராம்சம் இருப்பதாக நினை !

ப்ரதிபிம்பத்தாலே ஆதி பிம்பமாகிய ஹ்ருதயத்துள் ஆதித்யனை கண்டானந்திக்க செய்வதற்காக சூரிய பக்தி எங்கு காணப்படுகிறதோ அங்கே சூரியாம்சமிருப்பதாக நினை !

பேத புத்தியினுலேற்பட்ட ஆத்மாக்கள் தனித் தனியாக க்ரஹாதிகளை அதாதுக்கு அனுஸரணையாக அமைத்துக்கொண்டு சுக துக்காதிகளை அனுபவிக்கிறது. இந்த நிலமையிலெ க்ரஹாதிகளை வைத்துக்கொண்டு ப்ரஸ்நம் சொல்வதாலும், அவனுடைய மனுேபாவனைக்கு அனுஸரணையாகவுமுள்ள சிலதை சொல்லும்போது த்ருப்தி அடைந்து அதன்படி வரப்போகும் கார்யாதிகளை நினைத்து சிந்தனைக்கு ஆளாகிறன். அறிவாளியோ க்ரஹாதிகளின் அனுபவங்களைக் கேட்டாலும் கேட்காவிட்டாலும் கழிந்ததையும் வரப்போவதையும் பற்றி சிந்தனை செய்யாது தற்சமயம் நடக்கிற ஸந்தர்ப்பத்தை வீண் போக்காது மௌனமாகவே செய்து முடிப்பான்.

நல்ல ப்ரச்னத்தைக் கேட்டு ஆநந்திக்கவும் கெட்ட ஸமாசாரத்தைக் கேட்டு துக்கபபடவும் இல்லாது ஒரே தன்மையிலிருக்கும் மனிதன்தான் தன்னுடைய லக்ஷ்யமென்னும் க்ரஹத்தை உணர்ந்தவனுவான்.

எந்த விஷயத்தின் பொருட்டும் த்ருப்தியும், ஸஹிப்புத் தன்மையும் உன்னிடம்தானிருக்கிறது. அதை நீயே பார்த்து மேடு பள்ளங்களாகிய உன்னுள்ளத்தை த்ருப்தி, ஸஹிப்புத்தன்மை யென்ற இவ்

விரண்டு மண்வெட்டிகளை கொண்டு ஸமநிலமாக்கி விடுவாயானால் விசாலமடைந்த க்ரஹத்தின் அதிபதியாகிய உன்னையே கண்டு கொள்வாய்.

உன் கஷ்டத்தை உன்னுடைய முயற்சியினாலேயே தீர்த்துக்கொள்! என்று கூறுவதுடனில்லாது அதற்குரிய மார்க்கங்களையும் பஞ்சாங்கம் உபதேசிக்கிறது. முயற்சி செய்யவேண்டியது நீயே! அதல்லாது கஷ்டத்தை பஞ்சாங்கம் தீர்த்துவிடும் என்று எண்ணாதே!

உன் க்ரஹ நிலைக்கு நீயே அதிகாரியாகவிருக்கும் போது கஷ்டமோ, சுகமோ உன்னிடமே அடங்கியிருக்கிறது. அதை தெளிவுப்படுத்த பஞ்சாங்கம் ஏற்பட்டது. இந்தக் கஷ்டமும் சுகமும் கூடியிருப்பதாலேதான் இவ்விரண்டையும் கடந்து தன் மயமாக வழி உண்டாகிறது.

சுகத்தையே அனுபவித்துக்கொண்டு இருந்தாலும் சுகத்திற்கு அப்புறமுள்ளதை காணமுடியுமென்பதை சொல்வதற்கில்லை! கஷ்டமிருந்தால் சுகத்தின் பெருமை தெரியும்! கஷ்டமாகயிருப்பதையும் சுகமாகயிருப்பதையும்விட கஷ்டமும் சுகமும் கலந்த வாழ்வு இருப்பதால் மட்டுமே சுகதுக்காதிகளை கடந்த ஏகாந்த நிலை கிட்டுகிறது என்பதை க்ரஹ நிலையினாலே உணர வேண்டியது. இதை முன்னிட்டே "ஸ்வர்க்க போகாதிகளை அனுபவிக்கும் தேவர்களிலும்கூட மனித ஜன்மத்தை ஆவலோடே எதிர்பார்க்கும் சில அறிவாளிகளுண்டு!" என்றதை நாம் அறியவேண்டியிருக்கிறது. ஆகையினால் கஷ்டங்களையே அனுபவிக்கும் ஜந்துக்களைவிட, கஷ்டமும் சுகமும் கலந்த மனித

ஜன்மம் தேவ ஜன்மத்திற்கும் மேலானது என்பதை அறிவதால் மட்டுமே பஞ்சாங்க ரஹஸ்யம் விளங்கும்.

ஜனனமான தேதி, நேரம், லக்நம், மாதம், பக்ஷம், வர்ஷம், நக்ஷத்திரம், முதலியவற்ருல் நாம் செய்த பாப புண்யத்தின் கணக்கை தெரியபடுத்தும் ஒரு குறிப்பு. இதனை அறிந்து பாப செய்கையைவிட்டு புண்ய செய்கைகளை செய்து பாப புண்யங்களை கடக்க வழி காட்டக்கூடியது எதுவோ அதுவே பஞ்சாங்கம்.

கால நிர்ணயம், அகால நிர்ணயம் இவற்றை அறிவதால் நீ செய்கிற முயற்சிக்கு ஒருவித தடங்கலுமில்லாது அறிவைப் பெருக்கி ஆநந்திக்க செய்கிறது.

நீ உன்னுடைய முழு சக்தியையும் உணர்ந்தாயாஞல் க்ரஹ நிலைகள் தனித்தனியாக அமைந்ததை ஒரே தன்மையுடையதாக உன்னுள்ளே காண்பாய்—க்ரஹ நிலையின் முடிவாகும் இது.

இதற்கிடையில் குளிகன் என்ற ஒன்று க்ரஹம் போலவும், க்ரஹத்தை அதிகரித்த காலமாகவுமிருந்து விதியுடன் தொழில்களை செய்து வருகிறதைக் காண்கிரோம். க்ரஹம்போலவும் காலம்போலவும் தோணும் இந்த குளிகன் என்ற க்ரஹம்.

இந்த குளிகன் உண்டாவதற்கு காரணமாவது இராவணனுடைய தபோவலிமையை குறைக்கக் கருதி தேவர்களுக்காக ப்ரம்மாவினுடைய சரீர அழுக்காலேற்பட்ட உருண்டை என்று கூறுவர்—ப்ரம்மாவிற்கு சரீரம் இருக்கிறதா? அவர் உடம்பில் அழுக்கு எப்படி வந்தது? என்பதை கவனிக்கிற காலத்திலே

சரீரியாகவும், அசரீரியாகவும் தான் கொள்கிற அகம் காரமாவது ப்ரம்மாவைக் குறிப்பிடலாம். இந்த சரீரத்திற்கு அப்புறமுள்ள ஒரு வஸ்துவை சரீரத் துள்ளேயே காண்கிறபோதுள்ள நிலைமையிலிருந்தும் சரீரியாக காண்கிற அகம்ங்காரத்தினுடைய அழுக்கு களை துடைத்து ஒருட்டி எறிந்தார் என்றே கூற வேண்டியிருக்கிறது.

ஆகவே ப்ரம்மாவானவர் "நான் ப்ரம்மம்!' என்பதை உணர்ந்தவராக ப்ரகாசிக்கிறதினுலும், தானும் எங்கும் ப்ரகாசிக்கிறதினுலும் இராவண னுடைய விதிக்கு அனுஸரணையாக அகங்காரத்தை உண்டுபண்ணி குளிகன் என்ற காலநிர்ணயத்தை ஸ்ருஷ்டித்து தேவர்களுக்கு அபயம் அளித்தார். இராவணனே நவக்ரஹாதிபதியைப் பூஜித்து தானே பதியாக சோபித்து வந்தவனுனதால், அவனுடைய அட்டஹாஸத்தை தடுக்க யாராலும் முடியவில்லை, காரணம்? தபோவலிமையே! இதிலிருந்து நழுவ செய்வது எதனுல் முடியும்? அகம்ங்காரம் ஏற் பட்டால் தியான நிலை மறந்துவிடுமல்லவா? இதற்கு தகுந்த உயுக்தியை ப்ரம்மா கண்டறிந்து அவனை அகங்காரத்திற்குள்ளாக்கி அவனுக்கு விளங்காத ஒன்றை ஸ்ருஷ்டித்து அவனுடைய அட்டஹாஸம் வ்ருத்தியாகாத வண்ணம் செய்தார்.

இருந்தும், இராவணன் ஞானியாகையினுலே சிற் சில ஸமயங்களிலே தபோ குணம் மேலிட்டபோது பல செய்கைகளை தன்னை அறியாமலேயே செய்துவிடு கிருன். இது அவனுக்கே ஒன்றும் விளங்காமலிருந்

தது. கடைசி காலத்திலே ஸ்ரீ ராமபாணம் பட்டதும் முழுதும் விளங்கி தன்னைக் கண்டு ஆநந்திக்கிறான். தாம் செய்த குற்றத்தை நினைத்து நினைத்து வருந்துகிற ஸமயத்திலே ப்ரம்மா அருளை காட்டி ஸ்ரீ ராம ஸாயூஜ்யத்தை அடைவிக்கிறார்.

இந்த குளிகன் என்றது இராவணன் காலத்திலிருந்துதான் ப்ரஸித்தமாயிற்று. ஆத்மாவைப்பற்றிய விஷயமே குளிகன் ஆனதால் இராவணனுக்கு பின்பும் இருந்திருக்கலாம். ஆனால் அந்த சமயம் தொட்டுத்தான் குளிகன் என்ற க்ரஹ தைவத்தை உலகம் அறிந்தது.

உன்னுள்ளம் எப்பவும் பரிசுத்தம் அடைந்திருக்குமானால் காலங்களைப்பற்றிய சிந்தனை உனக்கு வராது. எல்லாம் நல்ல காலமே! நல்ல க்ரஹமே! சுபமாகவே முயற்சி நடக்கும், வீண் போகாது. பரிசுத்தத் தன்மையை உன்னுள்ளே கண்டாயானால் அதுவே தைவம்! அதுவே நல்ல சகுனம். அதுவே கார்ய ஸித்தி என்பதை அறி.

தம் லக்ஷ்யத்திலேயே க்ரஹாதிகள் அமைந்து அதன்படி தொழில்களை செய்விக்கிறதை நீ உன் லக்ஷ்யத்தை உணர்ந்துவிட்டால் கிரஹாதிகளுடைய தன்மை லக்ஷ்யத்திலேயே அடங்கியிருப்பதை காண்பாய்.

ஸ்ரீ விக்நேச்வரரைப் பூஜிப்பதால் கேது தசையால் பேடியிராது—எடுத்த கார்யங்களுக்கெல்லாம் தடஸ்தம் ஏற்படுவதாலும் கார்யம் வரும்போது கூட்டி வைக்கும் பெருமையாக ஸ்ரீ கணபதி அருள்வார்.

இராகு தசையால் பீடிக்கப்பட்டவன் ஈச்வர பக்தியினுலே பேடித்தன்மையையும், மமதையையும் ஒழிக்க வேண்டும்.

ஸ்ரீ சனைய்ச்வர தசையால் பீடிக்கப்பட்டவன் நல்ல அழகு வாய்ந்த விஷ்ணு ஸ்வரூபத்தைப் பூஜிப்ப தாலும் தியானிப்பதாலும் நன்மை அடைகிருன்.

ஸ்ரீ சுக்ர தசையால் பீடிக்கப்பட்டவன் ஸ்படிக லிங்க ஆராதனே, அம்பிகை பூஜை இவற்ருல் நன்மை அடைகிருன்.

ஸ்ரீ வியாழ தசையால் பீடிக்கப்பட்டவன் குரு பக்தி ஜபயஞ்ஞம் முதலியவற்ருல் நன்மை அடை கிருன்.

ஸ்ரீ புத தசையால் பீடிக்கப்பட்டவன், சிறு குழந்தைகளேயும் மாடு முதலியவற்றையும் போஷிப்ப தால் நன்மை அடைகிருன்.

ஸ்ரீ செவ்வாய் தசையால் பீடிக்கப்பட்டவன் ஸ்ரீ சுப்ரமண்யரையும். ஹரிஹர புத்திரர், பைரவர் முதலிய தைவங்களே ஆராதிப்பதால் நன்மை அடை கிருன். ஸ்ரீ சந்திர தசையால் பீடிக்கப்பட்டவன் யெளவ்வனமுடைய பெண்மணிகளே ஆராதிப்ப தாலும் பார்வதீ பரமேச்வர தம்பதிகளே ஆராதிப்ப தாலும் அர்த்த நாரீச்வர பக்தியையும் கொண்டு பூர்ண சந்திரனே ஸதா தியானத்தில் காண்பதாலும் நன்மை உண்டாகிறது.

ஸ்ரீ சூரிய தசையால் பீடிக்கப்பட்டவன் பாத ரக்ஷை, குடை, வஸ்திரம் முதலியவற்றை தானம்

வழங்குவதாலும் ஆஞ்சநேயர் முதலிய பக்தர்களைப் பூஜிப்பதாலும் நன்மை அடைகிருன்.

க்ரஹாதிகள் உன்னை பீடிப்பதில்லை! பீடிப்பதாக உன் ஊனக் கண்களுக்கு முதலில் தோன்றி வரும். அதற்காக பீடியை விடுவதற்காக பல கர்மங்களை செய்வதாலும் பூஜை, தியானம், ஜபம் முதலியவற்ருல் ஞானக்கண் பிறந்ததும், "நம்மாலேயே நாமே க்ரஹாதிகளைக் கொண்டு பீடிக்கப்பட்டுக்கொண்டோமே. யொழிய க்ரஹாதிகளுக்கு நம்மிடம் வெறுப்பு கிடையாது-விருப்பும் கிடையாது. ஆத்மார்த்த புருஷர்கள் ஆவார்கள்" என்பதை உணர்வாய்.

தனக்கு சாந்தி செய்துகொள்வதானது "தான் கோபம் முதலிய துர்குணங்கள் இல்லாது சாந்தியுடனிருக்கவேண்டுமென்பதே! முதல் கருத்து! அதல்லாது இஷ்டகாமியங்களைப் பெறுவதன் பொருட்டும் செய்யக்கூடிய சாந்தியானது விரும்பியது ஸித்தியாகிறது! ஆனல் தனக்கு மனேசாந்தி கிடைத்ததா? என்பதைக் கவனிக்கும்போதுதான் சாந்தியென்ற மஹாயஞ்ஞம் செய்யும் கருத்தை உணர்வாய்!

அண்டரண்ட சராசரங்களெல்லாம் சாந்தியென்ற திவ்ய தேஜஸில் அடங்கியிருப்பதாலே, தேஜஸ் உத்பவிக்க அதனம்சம் அக்நியில் நிறைந்திருப்பதால் யஞ்ஞாதிகள் மூலம் சாந்தி செய்துகொண்டு தன்னை ஈடேற்றிக் கொள்கிருேம்! என்பதை அறி!

லக்ஷ்யத்தைக் குறிப்பிடுகிற க்ரஹ நிலைகள் யாவும், மனேசாந்தியின் பொருட்டு மக்களிடம் அனுக்ரஹ பூர்வமாக உருவெடுத்ததுபோல காணப்

படுகிற அனுபவமேயொழிய, அதனதனுடைய குணச் சேர்க்கையை உணரும்போது லக்ஷ்யத்தை அடைந்த நீ சாந்தி அடைகிருய் என்று அறிவாயாக.

பகவத் நாமஸ் மரணையிஞலே ஏற்பட்ட லக்ஷ்யத்தை உணர்கிற காலத்திலே க்ரஹ நிலைகளுடைய ஒளியை காண்பாய் என்பது நிச்சயம்.

நவக்ரஹங்களென்னும் தோழர்களை கூடி, ஆத்ம சாந்தியென்னும் நிச்சல தன்மையை கூடு—

சாந்தி :—சாந்தி :—சாந்தி :

விதியை மீறுவது என்ருல் விதியை உதைத்து தள்ளி ஜோஸ்யம் பொய்யென்று சொல்வதல்ல! விதிக்குட்பட்ட ஸுகதுக்காதிகளை லக்ஷ்யம் செய்யாமல் தன்னுடைய ஏகாந்த நிலையிலேயே இருப்பது. இப்படியிருப்பவனுக்கு லக்ஷ்யாநந்தம் ஒன்றை தவிர வேறு சிந்தனையே இராது—ஸுகதுக்காதிகளை அடைந்த விதியை கூடி விருப்பும் வெறுப்பும் அடைகிறபோது ஆத்ம சிந்தனைக்கு தடங்கல் ஏற்பட்டு விதியை நினைத்து நொந்து விடுவது ஸகஜமாயிருக்கிறது. அப்போது ஜோஸ்யமென்ன? ஆருடமென்ன? ப்ரச்சனம் என்ன? என்பதை ஆராய்வதிலே காலத்தைக் கழித்துவிடாமல் ஸுகதுக்காதிகளை ஒன்றுபோலக் கருதி தன்னுடைய ஏகாந்த நிலையை நாடி லக்ஷ்யாநந்தம் கொள்வாயாக!

தைவீக தன்மையை அதாவது உன்னுடைய ஆத்ம சக்தியை விதியென்று கூறலாம்—“ தலை விதி ; என்று தலையை தொட்டு காண்பிப்பதால் நீ பரமாத்

மாவினிடமிருந்து ஜீவனுக நழுவி நாம ரூபங்களை தரித்த தலைமையிலிருந்து ஸுகதுக்காதிகளின் பொருட்டு பல ஜன்மங்களை அனுபவித்து தற்சமயம் ஸற்குரு கடாக்ஷத்தாலேற்பட்ட முயற்சியினுலே தலைமையில் தாம் நழுவியதிலிருந்துள்ள ஆத்ம சக்தியை உணரும்போது (தலைவிதி) கடைசீயிலுள்ள ஆதிகாரணத்தை சுட்டிக்காட்டுவதுபோலுள்ள செய்கையை தலைவிதி என்று கையை மேலே தூக்கி தலையை தொட்டு காட்டுவதனுலே தைவீக தன்மை யுடைய நமக்கு உணர்த்துகிறது-என்பதை அறி!

**சாந்தி**

**இதை படிப்பவரும் கேழ்பவரும் நவக்ரஹ மூர்த்தி களுடைய பூர்ண அனுக்ரஹம் பெறுவார்.**

ஓம் சாந்தி

ஓம் தத் ஸத்

# ஸ்ரீ புவனேஸ்வரீ பீடம்

## பரமஹம்ஸ ஸ்ரீ சாந்த சுப்ரமண்ய ஸ்வாமிஜி, ஓம் சாந்தி மௌனஸ்வாமிஜி அவர்கள் அருளிய நூர்களில் அச்சிட்டவை

1. ஸ்ரீ சங்கர கீதை !
2. ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந் திரள் சரிதம் !
3. பகவத் விஜயம்
4. ஸ்ரீ நவக்ரஹ லீலை
5. அனுபவ அருள் வாக்கியம்
6. ஸ்ரீ சிவ ப்ரஸாதம்
7. முருகன் புகழ்
8. ஸ்ரீ தத்த உதயம்
9. ஸ்ரீ யோக ஆஞ்சநேய ஸ்வாமி
10. ஸ்ரீ விச்வ மங்கள விநயகர்
11. ஸ்ரீ புரதீச்வரீயின் ஸ்வரூப வர்ணனை !
12. ஸங்கீதம் எப்படி ?
13. ஸ்ரீ ராம நாம ருசி

இந்த திவ்ய அச்சிட்ட புஸ்தகங்களை விரும்பும் பக்தர்கள், ஒரு சிறு 5 ரூ. அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். ஸத்கார்யங்களுக்கு பயன்படும் !

ஸ்ரீ ஸ்வாமிஜி அருளிய இன்னும் பல அனுக்ரஹ க்ரந்தங்களை வரைந்து வைத்திருக்கிறார்கள் ! அச்சிட்டுத் தர விரும்பும் அன்பர்கள் ஸ்வாமிஜியிடம் தெரியப்படுத்தி மேற்படி கைங்கர்யம் செய்து அனுக்ரஹம் பெறலாம் !


**ஸ்ரீ புவனேஸ்வரீ பீடம்**

ஓம் சாந்தி ஆச்ரமம்

(அம்பாள்புரி) அம்பத்தூர் P.O.

(MADRAS)